*Kumaraṉ*

*Āram 14, muttu 2*

*August 27, 1936*

Record no. 313

REG. NO. M. 1823. 20 பக்கங்கள். KUMAR

சந்தா விவரம்

உள்நாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 5—0—0
ஆறு மாதம் 3—0—0
ஸிலோன், பர்மா வருஷம் ஒன்றுக்கு ரூ. 6—0—0
மலாய் முதலிய வெளிநாடு வருஷம் ஒன்றுக்கு ரூ. 7—0—0

# குமரன்

விளம்பர[illegible]

நோட்டீஸ், நோ[illegible] விளம்பரம் முதலி[illegible] வைகளுக்கு இஞ்ச் ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்த மானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத் திற்கு மானேஜருக்கு எழுதவும்.

(மாதப்பதிப்பும் சேர்ந்தது.)

வியாழன் தோறும் வெளிவரும்.

PUBLISHED EVERY THURSDAY.

ஆசிரியர்:— சொ. முருகப்பா.

ஆரம் 14. | காரைக்குடி, தாது-ஹு ஆவணி-மீ 12உ (27—8—36.) | முத்து 2.

# காங்கிரசுக்கு மெஜாரிட்டி கிடைக்காது

## பணமும் செல்வாக்குமின்றி தேர்தல் வெற்றி கிட்டாது

## பதவிப் பிரச்னையில் பலவித சங்கடங்கள்

### கும்பகோணத்தில் திரு. சந்தானம் பேச்சு

கும்பகோணம், ஆகஸ்டு 23

இன்று கும்பகோணம் தாலுகா காங்கிரஸ் மகாநாட்டில், திரு. கே. சந்தானம் தலைமை வகித்து செய்த பிரசங்கத்தில் புதிய அரசியல் விஷயமாகவும் ஸ்தல ஸ்தாபன தேர்தல் விஷயமாகவும் காங்கிரஸ் நிலைமையைப் பற்றி அவர் கூறியவற்றின் சாரம் வருமாறு:—

காங்கிரஸ் ஸ்தாபனத்திற்குள்ளேயே கஷ்டங்கள் அதிகரித்திருக்கின்றன.

காங்கிரஸ் சபைக்குள் இருந்து வரும் அபேதவாத கோஷ்டிகாளுக்கு நாள் அதிகமான பலமும், செல்வாக்கும் அடைந்து வருகிறது.

பண்டித ஜவஹர்லால் நேரு இந்தக் கோஷ்டியில் வெளிப்படையாக இன்னம் சேரவில்லை யென்றாலும், அவருடைய பெயரும் செல்வாக்கும் காங்கிரஸ் அபேதவாதிகளுக்குப் பேருதவியாயிருக்கின்றன.

பழைய தலைவர்களில் பலர் இன்னம் கலப்பற்ற தேசீயத்தையே தமது லட்சியமாகக் கருதிவருகின்றன.

இந்த இரண்டு கோஷ்டிகளில் எதையும் காங்கிரஸ் இழப்பது கூடாது.

### 10 வருஷ திட்டம்

ஆனால் காங்கிரசுக்குள்ளேயே முக்கியமான ஸ்தானங்களைப் பெறுவதற்காக, இந்த இரண்டு பிரிவுகளும் சூழ்ச்சி செய்து கொண்டிருந்தாலும் காங்கிரஸ் வேலை சரிவர நடைபெறாது. ஆகையால் இருசாராரும் சேர்ந்து, பொதுவான ஒரு வேலைத்திட்டத்தை அடிப்படையாகக் கொண்டு ஒரு முகமாகப் போராட்டத்தை நடத்திச் செல்வதே புத்திசாலித் தனமாகும். முற்றிலும் எதிர்பாராத நிகழ்ச்சிகள் தேசத்திலோ, அல்லது வெளியிலோ ஏற்பட்டு, அவற்றின் விளைவாக திட்டத்தில் மாறுதல் செய்ய வேண்டிய அவசியமான நிலைமை ஏற்பட்டாலொழிய, ஒரு குறிப்பிட்ட காலத்துக்கு—உதாரணமாக 10 வருஷங்களுக்கு—இந்த வேலைத்திட்டத்தை மாற்றவே கூடாது.

தலைவர்களுக்கிடையே, கிரியாம்சையில் பாஸ்பர நம்பிக்கையும், ஸ்நேகபாவமும் இருப்பது, ஜனங்களின் ஆதரவைப் பெறுவதற்கும், தொண்டர்களைச் சரிவர நடத்திச் செல்வதற்கும் இன்றியமையாதது. ராஜீய தத்துவங்களின் விளைவாக இருந்து வரும் வித்தியாசங்களை தற்காலீகமாக ஒத்திவைக்கக் கூடுமானால், பொதுப்படையான ஒரு வேலைத் திட்டத்தையும், அதை அனுஷ்டிக்க வேண்டிய முறைகளையும் நிர்த்தாரணம் செய்ய முடியும். இப்பொழுது ஏற்பட்டிருக்கும் குழப்பத்தையும் ஒழுங்கீனத்தையும், இப்படிச் செய்வதன் மூலம் ஒழித்து விடலாம்.

### துரோகம்.

இது சம்பந்தமாய் ஸ்தல ஸ்தாபனங்களைக் காங்கிரஸ் கைப்பற்ற முயற்சித்ததில் நமக்கு ஏற்பட்டுள்ள வருந்தத்தக்க அனுபவங்களைப் பற்றி, இங்குகுறிப்பிடவேண்டியது அவசியமாகிறது.

காங்கிரஸ் உறுதிமொழிப் பத்திரத்தில் கையெழுத்திட்டு, காங்கிரஸின் பெயரால் தெரிந்தெடுக்கப்பட்டவர்களில் பலர், கட்டுப்பாடாக நடந்து கொள்ளாமல் துரோகம் செய்தது எல்லோருக்கும் வருத்தத்தை விளைவிக்கிறது. தனிப்பட்ட நபர்களைப் பற்றி நான்குறிப்பிடப் போவதில்லை...... ...............கட்டுப்பாட்டை மீறுகிறவர்களின் செல்வாக்கு எவ்வளவுக்கெவ்வளவு அதிகமா யிருக்கிறதோ அவ்வளவுக் கவ்வளவு அவர்களுடைய துரோகத்தின் விளைவாக ஏற்படும் ஊழல்களும் அதிகமாய் இருக்கும். சிறந்த தொண்டர்கள் மீது நடவடிக்கை எடுத்துக்கொள்வதால், காங்கிரஸ் ஸ்தாபனத்துக்குத்தான் அதிக நஷ்டம் உண்டாகும்.

### பணம்செல்வாக்கு.

காங்கிரஸ் அபேட்சகர்களைப் பொறுக்குவதிலுள்ள கஷ்டங்களைப்பற்றி, அவர்கள் போதிய கவனம் செலுத்தவில்லை. சட்டமறுப்பு இயக்கங்களின் விளைவாக, காங்கிரஸ் ஸ்தாபனங்களின் அமைப்பில் ஏற்பட்டுள்ள மாறுதலைப் பகிரங்கமாய்ப் புரிந்து கொண்டு நடந்துகொள்ளும் தைரியம் யாருக்கும் வரவில்லை.

நாம் விரும்பினாலும், விரும்பாவிட்டாலும் பணம், செல்வாக்கு இவற்றின் உதவியின்றி தேர்தல்களில் போட்டி போட்டு ஜெயம்பெற முடியாது.

மற்றவர்களைப் போல் காங்கிரஸ் காரர்களுக்கும் இந்த உண்மை தெரியும். ஆனாலும், மற்றவர்களைப் போல் அவ்வளவு பகிரங்கமாக இதை ஒத்துக்கொள்வதற்கு காங்கிரஸ்காரர்கள் சற்று தயங்குகின்றனர்.

இது ஒருபுறமிருக்க. காங்கிரஸினிடம் அபிமானமில்லாத பலர், தங்களுக்குப் பணமும் செல்வாக்கு மிருப்பதன் காரணமாக தங்கள் மனோபீஷ்டத்தை பூர்த்தி செய்து கொள்வதற்கு, காங்கிரஸை சௌகரியமான கருவியென்று கண்டனர்.

இதனால் காங்கிரஸ் தலைவர்கள் [illegible] அபேட்சகர்களின் காங்கிரஸ் அபிமானத்தைச் சரிவர ஆராய இஷ்டப்படவில்லை.

சட்டசபை வேலைகளையும், ஸ்தல ஸ்தாபன வேலைகளையும் சரிவர நிறைவேற்ற வேண்டுமானால், ஒத்துழையாமைப் போராட்டத்தில் கலந்து கொள்ள முடியாமல் விலகி நின்ற பழைய காங்கிரஸ்காரர்களை மீண்டும் சேர்த்துக்கொள்ள வேண்டியது அவசியம் என்பதை இப்பொழுது பகிரங்கமாய் ஒத்துக்கொள்ள வேண்டும்.

### இரண்டும் கெட்டது

மாகாண அசெம்பிளிகள் மாகாண கவுன்சில்கள் (மேல் சபைகள்) இவற்றின் தேர்தலில் காங்கிரஸ் கலந்துகொண்டு, எவ்வளவு சாத்தியமோ அவ்வளவு ஸ்தானங்களைக் கைப்பற்ற வேண்டுமென்பது எல்லாக் காங்கிரஸ்காரர்களும் பொதுவாக ஒப்புக் கொண்டுள்ள விஷயம். ஆனால், தெரிந்தெடுக்கப்படும் இந்தக் காங்கிரஸ்காரர்கள் என்ன செய்ய வேண்டும் என்பதைப் பற்றித்தான் தீவிர அபிப்பிராய பேதம் இருந்து வருகிறது. இந்த விஷயத்தை முடிவு செய்யும் பொறுப்பை லக்ஷ்மணபுரி காங்கிரஸ் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக்கு விட்டுவிட்டது.

தேர்தல்கள் நடந்த பிறகு, இதைப்பற்றி முடிவு செய்து கொள்ளலாமென்ற நோக்கத்துடன், பிரச்னையை தள்ளிப்போடும் முறையை அழுத்தமாய்க் கண்டிக்கவேண்டியிருக்கிறது. பொதுமக்களின் அரசியல் அறிவு விசாலப்படுவதே காங்கிரஸ் தேர்தல்களில் கலந்துகொள்வதின் முக்கிய நோக்கம்.

தங்கள் பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டபின் என்ன செய்யப் போகிறார்கள் என்பது தெரியாமல் வோட்டர்கள் ஆதரவளிக்க வேண்டுமெனக் கோருவது, தேர்தலில், காங்கிரஸ் கலந்துகொள்வதன் முக்கி[illegible]

(16-ம் பக்கம் பார்க்க)



Best copy available.

## ராமவிலாஸம் சினிமா பாலெஸ்

நாடகங்களுக்கும், சினிமாக்களுக்கும், தொழில் முறைகளிலும், பார்க்கும் முறைகளிலும், பல ஊர்களுக்கும் விஜயம் செய்து கொண்டிருந்த நான், செட்டிமார் நாட்டில் சிறந்திலங்கும், காரைமாநகரில் ஓர் உயர்தர காக்ஷிசாலை இல்லையே என எண்ணுவதுண்டு, இது போன்று என் நண்பர்கள் பலர் என்னிடம் கூறியிருக்கின்றனர். அக்குறை நிவர்த்தியாகவே ஸ்ரீ ராமவிலாஸம் சினிமாபாலஸ், பொதுஜன சௌகர்யங்கள் பலவும், பாங்குடன் அமையப்பெற்று எழிலுடன்மிளிர ஏற்பட்டுவிட்டதென நினைக்க இடந்தருகிறது. இந் தக்கட்டிடத்தை மிகுந்த உயரிய முறைகளில் ஸகலஜன சௌகர்யம் ஸௌந்தர்யமாயிருக்க வேண்டுமென்ற, நல் நோக்கத்துடன், ஏராளமான பொருட் செலவையும், சிரமத்தையும் கருதாது, சீரியமுறைகளில் சிறப்புறக் கட்டியிருக்கின்றனர். உயர்ந்தரேட் டிக்கட்முதல், குறைந்தரேட் டிக்கட்வரை, மிகவும் வசதியளிக்கும் வகைகள் வன்னமாய்த் திகழ்கின்றன, முகப்பு மிகுந்த அலங்காரமாய், இரண்டு பக்கமும் கேட்டுகள் உள்ளதாயும் ஜன நெருக்கடியின்றி விஸ்தாரமாய், போகவர அநுகூலம் வாய்ந்ததாயும் இருக்கின்றது. உள்ளே அழகிய ஹால், வகுப்புகள் வனப்புடன் வகுக்கப் பெற்றிருக்கின்றன. ஸ்திரீகளுக்கும் மிகுந்த இடவசதி உயர்தர வகுப்பிற்கு உன்னத உப்பரிகை, ஒலிக்கும், ஒளிக்கும், உயர்தரமானதும், சுத்தமானதும், தெளிவானதுமான மிஷின்கள். மெல்லிய காற்றோட்டத்திற்கு விசிறிகள் பல, சிறந்தபடங்கள் பல மிளிரப் போவதாக ப்ரஸ்தாபம். மொத்தத்தில், சென்னைக்கு ராக்ஸி டாக்கீஸூம், பம்பாய்க்கு ரீகல் டாக்கீசும், கல்கத்தாவிற்கு மதன்தியேட்டரும் அமைந்தது போல், காரைக்குடிக்கு ஸ்ரீராமவிலாஸம் ஸினிமாபாலஸ் அழகுற அமைந்திருக்கிறது எனலாம். முக்கியமாய்க் குறிப்பிடக்கூடிய விஷயம் யாதெனில் ஏழைகளென்றும், செல்வர்களென்றும், வித்தியாசம் பாராட்டாது எல்லோரிடமும் ஏகமனதுடன் மிளிர்ந்து, பொதுஜன சௌகர்யங்கள், பொது நல ஊழியங்கள், முதலியவைகளில் ஈடுபட்டு ஊக்கமும் உணர்ச்சியும் ததும்ப உழைப்பவரும், ஸ்ரீராமவிலாஸம் தியேட்டர் பாகஸ்தருமான, ஸ்ரீமான் உ. அ. அரு. அருணசலம் செட்டியார் அவர்கள், மிகுந்த சிரமத்துடனும், நல்ல திறனுடனும், பலரும் பரிந்து புகழும் வண்ணம், மேற்படி தியேட்டரை நவீன முறைகளில் நல்ல ஏற்பாடுகளுடன், நலமுறக்கட்டி முடித்தது மிகவும் சிலாகிக்கத்தக்கது என்று ஒரு அன்பர் எழுதுகிறார்.



## காரைக்குடி முனிஸிபாலிடி

### அவசர மீட்டிங் நடவடிக்கைகள்

(நமது நிருபர்)

ஆகஸ்டு-மீ 20உ வியாழக்கிழமையன்று காலை 10 மணிக்கு முனிஸிபல் கௌன்ஸிலின் அவசர மீட்டிங் சேர்மென் திரு. மெ. செ. மெ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது.

மீட்டிங் அஜண்டா, முதல்நாள் இரவு 7-மணிக்கு மேல் தான் கௌன்சிலர்களுக்குக் கிடைத்ததென்றும், அவசரமாக முடிக்கவேண்டிய விஷயங்களெதுவும் அஜண்டாவில் காணப்படவில்லையென்றும், இன்னும் சாவகாசம் கொடுத்து மீட்டிங்கைக் கூட்டியிருக்கலாமென்றும் சில அங்கத்தினர்கள் கூறினார்கள். கமிஷனர் சமாதானம் சொன்னார். பிறகு மீட்டிங் துவங்கியது.

திரு. ச. பீ ந. மு. முகம்மது இப்ராகிம் ராவுத்தாவர்களின் கேள்விகளுக்கு பதில் அளிக்கப்பட்ட பின்பு முனிஸிபல் கௌன்ஸிலர் திரு சி. மு. அரு. நாராயணன் செட்டியார் அவர்களால் பின்வரும் தீர்மானங் கொண்டு வரப்பட்டது:—

நமது மாட்சிமை தங்கிய எட்டாம் எட்வர்டு சக்கரவர்த்தியவர்கள் சில தினங்களுக்குமுன் ஏற்பட்ட துப்பாக்கி விபத்திலிருந்து தெய்வ கிருபையினால் தப்பியதற்கு இக் கவுன்ஸில் மிக்க சந்தோஷப்படுவதோடு அவர்கள் நீடூழி காலம் வாழ வேண்டுமாயும் பிரார்த்திக்கிறது.

இத் தீர்மானம் திரு. மு. ராம. பெரியணன் செட்டியாரவர்களால் ஆதரிக்கப்பெற்று ஏகமனதாகநிறைவேறியது.

இதற்கிடையில், தாம் அனுப்பிய கேள்விகளோடு ரோடு சீர்திருத்தம் சம்பந்தமாக ஒரு தீர்மானம் அனுப்பியிருந்ததாகவும், அது என்னயிற்றென்று தெரியவில்லையென்றும், திரு. ச. பீ. ந. மு. முகம்மது இபுராகிம் ராவுத்தரவர்கள் கூறினார்கள். இத்தீர்மானம் தமது பார்வைக்கு வந்ததாக ஞாபகமில்லையென்றும் கமிஷனர் கூறினார். அதன் பேரில் ஷை தீர்மானம் சபையிலே பிரேரேபிக்கப்பெற்றது. அதனை திருவாளர் மு. ராம. பெரியணன் செட்டியாரவர்கள் ஆமோதித்தார்கள். அவசர மீட்டிங்கில் அஜண்டாவில் குறிப்பிடாத விஷயங்களைப்பற்றி ஆலோசிப்பது சரியில்லையென்று திரு. ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கஞ் செட்டியாரவர்கள் கூறினார்கள். அவசரமான விஷயங்களைக் குறுகியகால நோட்டீசில் ஆலோசனைக் கெடுத்துக் கொள்ள இடமிருப்பதாக கமிஷனர் கூறினார். இது சம்பந்தமாக சிறிது விவாதம் நடந்தது. கடைசியாக திரு. ச. பீ. ந. மு. அவர்களின் தீர்மானம் ஒப்புக்கொள்ளப் பெற்றது. ஆனால் அதை அடுத்த கூட்டத்தில் விவாதிக்கலாமென்று தீர்மானித்தனர்.

தண்ணீர் சப்ளை ஸ்கிம் சம்பந்தமாய்த் தேவையாக உள்ள நிலத்தின் மேல்வார பாத்தியத்தை அக்வயர் செய்யும் விஷயமான தீர்மானத்தின் பேரில் மீண்டும் சில நிபந்தனைகட்குத் தயாராக இருப்பதாக கவுன்ஸில் தீர்மானம் செய்து அனுப்பவேண்டுமென்ற கலெக்டர் கடிதம் ஏற்றுக்கொள்ளப்பட்டது. மெ. மெ. வீதி, ராமசாமி செட்டியார் தெரு ஆகியவற்றை அக்வயர் செய்யும் விஷயமாக மேலும் சில நிபந்தனைகட்கு உட்படத் தயாராக இருப்பதாக கவுன்ஸில் தீர்மானம் செய்ய வேண்டுமென்ற விஷயமும் ஒப்புக்கொள்ளப் பெற்றது.

தேவகோட்டை சப் கோர்ட்டு 1934ம் வருஷ ஏ. எஸ். 94,95,96 நிர் கேசுகளில் முனிஸிபாலிடிக்கு அனுகூலமாகக் கொடுக்கப்பட்ட தீர்ப்பின் பேரில் வாதிகளால் மதராஸ் ஹைகோர்ட்டில் தாக்கலாகியுள்ள கேஸை எதிர் வழக்காட அனுமதிக்கப்பட்டது.

நேரமாகிவிட்டதால் கூட்டத்தை ஒத்திவைக்கவேண்டுமென்று திரு. மெ. செ. ராமசாமி செட்டியாரவர்களால் கொண்டுவரப்பட்ட தீர்மானம் ஏகமனதாக ஒப்புக் கொள்ளப் பெற்று மீட்டிங் கலைந்தது.

## மின்சார விளக்குத் திறப்புவிழா

### மாநகரியில் திரு. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் திறந்துவைத்தார்கள்

19—8—36உ புதன்கிழமை பிற்பகல் 5 மணிக்கு திறப்புவிழாத் தலைவர் சிதம்பரஞ் செட்டியாரவர்களை மாநகரி நகரத்தார் அவர்கள் சத்திரத்திலிருந்து மாலையணிவித்து, விருது வாத்தியங்களுடன் நகரத் தண்டாயுதபாணி ஆலயத்துக்கு அழைத்து வந்தார்கள். (குரூப் போட்டோ) புகைப்படம் எடுக்கப்பட்டது. 5-20 முதல் 5-40 வரை தேனீர் (டீபார்ட்டி) விருந்து நடைபெற்றது. அதன்பின்னர் திறப்புவிழாவிற்கு ஏற்பாடு செய்திருந்த ஆசனங்களில் எல்லோரும் அமர்ந்தார்கள். சிதம்பரஞ் செட்டியாரவர்கள் விழாவிற்குத் தலைமை வகித்தார்கள். லெ. அரு. கல்வி நிலைய மாணவ மாணவிகளால் கடவுள் வாழ்த்துப் பாடப்பட்டது. திரு. நா. நா. சுப்பிரமணியஞ் செட்டியார் அவர்கள் நகரத்தார் சார்பில் தலைவருக்கு வந்தனோபசாரப்பத்திரம் வாசித்துக் கொடுத்தார்கள். அதில் திரு. சிதம்பரம் செட்டியார் அவர்கள் காரைக்குடி கார்ப்பரேஷனிலிருந்து சுமார் 5000 ரூ செலவு செய்து மாநகரிக்கு இலவச லயன்போட்டு உதவியதைப் பாராட்டியும், காரைக்குடி எலெக்ட்ரிக் கார்ப்பரேஷனில் ஆரம்ப முதல் மானேஜிங் டைரெக்டராக இருந்து அதனை லாபகாமாக நடத்தி வருவதைப் புகழ்ந்தும் குறிப்பிடப்பட்டிருந்தது.

அதற்குத் தலைவர் அவர்கள் தக்க பதிலளித்ததோடு மின்சார சக்தியின் உபயோகத்தை விளக்கியும் காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்பரர் எலெக்ட்ரிக் பவர் கார்ப்பரேஷன் முன்னேற்றத்தின் சில குறிப்புகளையும் அரியக்குடிக்கும் புதிதாக லயன் வேலை நடைபெறுவதையும் நாச்சியார்புரம், கல்லல் முதலிய ஊர்களுக்கு மின்சார சக்தியை (எலெக்ட்ரிக் கரண்ட்) கூடிய விரைவில் சப்ளை செய்ய உத்தேசித்திருப்பதையும் பேசி 6 மணிக்கு வாத்திய கோஷங்களினிடையே மின்சார விளக்கைத் திறந்துவைத்தார்கள்.

திரு. நா. கனு. சோமசுந்தரஞ் செட்டியாரவர்கள் தலைவருக்கும் விழாவிற்கு வந்திருந்த பெரியார்கட்கும் வந்தனம்கூறவிழா இனிதுநிறைவெய்தியது.

பொதுஜன சௌகரியத்தையே முழு நோக்கமாகக்கொண்டு சுமார் ரூ. 5000 வரை செலவு செய்து மாநகரிக்கு இலவச லயன் போட்டு உதவிய காரைக்குடி ஸ்ரீ மீனாக்ஷிசுந்தரேஸ்பரர் எலெக்டிரிக் பவர் கார்ப்பரேஷன் லிமிடெட் கம்பெனியாரவர்கட்கும் அதனை அன்போடு ஆதரித்த நகரத்தார் அவர்கட்கும் எனது மனமார்ந்த நன்றி உரியதாகுக என்று ஒரு நிருபர் எழுதுகிறார்.







## மதிப்புரை

### கவிச்சக்ரவர்த்தி சுப்ரமணிய பாரதி சரிதம்

[ஆசிரியர்:— ஆக்கூர் அனந்தாச்சாரியார். வெளியிட்டவர்:—கிட்டப்பா மலர்ப் பிரசுராலயம், செங்கோட்டை. பக்கம் 88. விலை 0-6-0 தபாற் செலவு வேறு.]

இது எளிய நடையில் யாக்கப்பெற்றிருக்கிறது. பாரதியார் தமிழ் நாட்டின் செல்வமாவர். அவருடைய சரிதத்தைத் தமிழ் மக்கள் ஒவ்வொருவரும் படித்தறிய வேண்டிய தவசியமாகும். மாணவர்களும் மாணக்கியரும் படித்துத் தீரவேண்டிய புத்தகம் இது. விலையும் மிக சொற்பம். இதில் பாரதியாரின் வாழ்க்கை, குணம், கவிகள் தமிழகத்தில் படுங்கஷ்டம் போன்றவை தெளிவுபெற விளக்கப்பட்டுள்ளன. டாக்டர் மகாமகோபாத்யாய சாமிநாதய்யரின் முகவுரையும், பாலி சு. நெல்லையப்பரின் சிறப்புரையும் உள்ளன.

### "ஜன நாயகம்"

[தினப்பதிப்பு. ஆசிரியர்:—மணக்கவ. ரெ. திருமலைசாமி. ஆண்டு சந்தாஉள்நாடு 9-0-0 வெளிநாடு 18-0-0 விலாசம் மானேஜர், ஜனநாயகம், 2-16 மௌண்ட் ரோடு, சென்னை]

இது ஜனநாயகக் கட்சியைத் தாங்கி நடப்பதென்று தெரிகிறது. நல்ல முறையில் வெளிவருவது. தமிழகத்தினருக்கு வெற்றியென்று கூற வேண்டும். நல்ல தமிழில் தமிழ் மக்கள் நலனுக்கு இப்பத்திரிகை உழைக்க முன்னிற்கிறது. சமூக சீர்திருத்தத்திற்கும் நிதானமான அரசியல் நெறிக்கும் இதுபேருதவியளிப்பதாகுமென்று தெரிகிறது. வகுப்புவாதம் கூடாதென்று சொல்லிக் கொண்டே வகுப்பு வித்தியாசத்தை நிலைநாட்டும் போலி வேஷம் இப்பத்திரிகையின் வளர்ச்சியால் உடைபடுமென்று நம்புகிறோம்.

### "விஜயன்"

[ஆசிரியர்,— ஆவி. லெ. அருணசலச் செட்டியார். வாரப் பதிப்பு. ஆண்டு சந்தா:- உள்நாடு 5—0—0. பர்மா சிலோன் 6—0—0. மற்ற வெளி நாடுகள் 7—0—0. விலாசம்.— மானேஜர், விஜயன், பெரிய கடைத் தெரு, திருச்சி]

இப் பத்திரிகையின் முதல் இதழ் வரப் பெற்றோம். செட்டிநாட்டிலுள்ள நான்கு பிரமுகர்களின் படங்கள் திகழ்கின்றன. திருச்சியிலிருந்து வெளி வந்தாலும் தன வணிக சமூகவிஷயங்களில் தொண்டாற்றும் என்று தெரிகிறது. கிராமங்களில் வாழும்மக்கட்குத்தொண்டாற்றுதலும் பிற தேச நலம், சமூக நலன் குறித்து, உழைத்தலும், அதன் நோக்கமாகுமென்றும், அதன் ஆசிரியர் உரையால்தெரிகிறது. "இந் நாட்டில் தற்காலமுள்ள எந்தக் கட்சியிலும் விஜயன் சேர்ந்தவனல்ல" என்று ஆசிரியர் குறிப்பிடுவது கவனிக்கத்தக்கதாகும். இப்பத்திரிகை சமூக சீர்திருத்தத் துறையில் தீவிரமாக வேலை செய்ய முன்வர வேண்டுமென்று விரும்புகிறோம்.

### நவீன கதா புத்தகசாலை

#### வெள்ளிவிழா மலர்

[வெளியிட்டவர்:—நவீனகதாபுத்தகசாலையார். பக்கம் 184. விலை அணா நான்கு. கிடைக்குமிடம்:-நவீனகதாபுத்தகசாலை, மங்கமாரி வீதி, இரங்கோன்.]

ரங்கூனில் நவீனகதா புத்தகசாலை தமிழ்மக்கட்குச் சிறந்த ஸ்தாபனமாக விளங்கி வருகிறது. வெளிதேசத்தில் அறிவுத்துறைக்கு உதவி செய்யும் ஒரு ஸ்தாபனம் நீண்டநாள் தொடர்ந்து நடைபெற்று அபிவிருத்தியடைந்து வெள்ளிவிழாக் கொண்டாடும் படியான பேற்றைப் பெறுவது அருமையாகும். இதனையொட்டி வெளிவந்திருக்கும் இம்மலர் வரவேற்கத்தக்கது. புத்தகசாலையின் ஆரம்ப முதல் நாள் தோறும் அது வளர்ந்து வந்த முறையும் அதற்கு உதவி புரிந்தவர் விபரமும் நிரல்படத் தொடுக்கப்பட்டிருக்கின்றன. பலருடைய கட்டுரைகளும் பாட்டுகளும் வாழ்த்தும் படங்களும் மலரை அழகு படுத்துகின்றன.

### சந்திரோதயம்

[மாதம் இருமுறை, ஆசிரியர்:- சொ. பழனியப்ப செட்டியார். ஆண்டு சந்தா உள்நாட்டுக்கு 3—0—0. வெளிநாட்டுக்கு 5—0—0. விலாசம்:- மானேஜர் சந்திரோதயம், கீழராஜவீதி, புதுக்கோட்டை.]

சென்ற மாதத்திலிருந்து இப்பத்திரிகை வெளிவருகிறது. கதை கட்டுரை சம்பாஷணை செய்யுள் போன்ற எல்லா வகையிலும் சிறப்புறுகிறது. சமூக சீர்திருத்தம் இலக்கியம் பொருளாதாரம் முதலிய மக்கட்கின்றியமையாத பல பொருள்களையும் உலக வர்த்தமானங்களையும் தாங்கி வெளியிடப்பெறுகிறது. ஹாஸ்யச் சுவையும் பலவிதமான படங்களும் மிளிர்கின்றன.

## ஜவஹர்லால் சென்னை விஜயம்

### ராஜேந்திரரும் வருகிறர்

பண்டித ஜவஹர்லால்நேரு அக்டோபர் மாதத்தில் முதல் மூன்று வாரங்களில் சென்னை மாகாணத்தில் சுற்றுப் பிரயாணம் செய்வார்.

ராஜேந்திரர் அக்டோபர் மாத இறுதியில் 6 வாரம் ஓய்வு கொள்வதன் பொருட்டுச் சென்னை வருகிறார்.

### காங்கிரஸ் அங்கத்தினர்கள்

#### செப்டம்பர் 30உ வரை சேர்க்கலாம்

காங்கிரஸ் காரியக்கமிட்டி 23உ கூட்டத்தில் காங்கிரஸ் மெம்பர்களைப் பதிவு செய்வதற்கான காலத்தை ஒரு மாதம் வரை நீடித்தது. செப்டம்பர் 30உ வரை காங்கிரஸ் மெம்பர்களைச் சேர்க்கலாம்.

## ரஷ்யாவின் யுத்த முஸ்தீபு

### எல்லைப்புறத்தில் 10 லக்ஷம் துருப்புக்கள்

ரஷ்ய யுவர்கள் 19 வயதானவுடன் ராணுவப் பயிற்சி துவக்கவேண்டுமென சமீபத்தில் ஒரு அறிக்கை பிறப்பிக்கப்பட்டது. இப்பொழுது ரஷ்ய சர்க்கார் மேற்கு எல்லைப்புறத்தில் 10 லட்சம் துருப்புகள் தங்குவதற்கான வாஸஸ்தலங்கள் நிர்மாணிக்கத் துவங்கிவிட்டதாகச் சொல்லப்படுகிறது.

சென்ற வருஷம் உற்பத்தியானதைப் போல் சுமார் முக்கால் மடங்கு அதிகமான ஆகாய விமானங்கள் இவ்வருஷம் உற்பத்தி செய்யப்படுமென்று சர்க்கார் வெளியிட்ட புள்ளிவிபரங்களிலிருந்து தெரிகிறது.

மற்ற நாடுகள் விமானப்படைகள் அனைத்தையும் ஒன்று சேர்த்தால் எவ்வளவு மகத்தானதாக இருக்குமோ அவ்வளவு மகத்தானதாக சீக்கிரத்தில் ரஷ்யப்படை பெருக்கப்படுமென்று சோவியத் யுத்தமந்திரி அறிவித்திருக்கிறார். இவ்விதம் படைவலியால் எல்லா வகையாலும் பெருக்கப்படுவதன் மூலம் ரஷ்யாவை எந்த தேசமும் ஜெயிக்க முடியாதென்று தெரிகிறது.

### "கமிட்டியை மாற்றுங்கள்"

திருச்சி சம்பவத்துக்கு தமிழ்நாட்டுக் காங்கிரஸ் காரியக்கமிட்டியே காரணமாதலால் அந்தக் கமிட்டியை ரத்துச் செய்துவிட்டு தலைவர் உள்பட யோக்கியதைவாய்ந்தவர்களைத் தேர்ந்தெடுக்க ஏற்பாடு செய்யுமாறு ஜவகர்லாலைக் கேட்டுக்கொண்டு 20உ சேலத்தில் திரு. பவானிசிங் தலைமையில் நடந்த காங்கிரஸ் அபேதவாதிகள் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

## கனம் பொப்பிலி

### மந்திரியாக நியமிக்கப்பட்டார்

#### சர்க்கார் அறிக்கை

சென்னை ஆகஸ்டு ...

கனம்பொப்பிலிராஜா மீண்டும் மந்திரியாக நியமிக்கப்பட்டிருப்பதாக இன்று பிற்பகல் வந்துள்ள ஒரு சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

இனிமேல் அந்தந்த மந்திரிகள் பொப்பிலி ராஜா ராஜீநாமா செய்வதற்கு முன்னர் எந்த இலாகாக்களைக் கவனித்துக் கொண்டிருந்தார்களோ அதைக் கவனித்து வருவார்கள்.

ஸ்தல சுயாட்சி, சுகாதாரம், எஞ்சினீயரிங், மத ஸ்தாபனங்கள் ஆகிய இலாகாக்களை பொப்பிலி ராஜா கவனித்து வருவார். ஸ்ரீ. பி. டி. ராஜன் விவசாயம், கூட்டுறவு, கைத்தொழில் ஆகிய இலாகாக்களை கவனித்து வருவார்.

ஸ்ரீ. குமாரசாமி ரெட்டியார் கல்வி, கலால் ஆகிய இலாகாக்களைக் கவனித்து வருவார்.

### இந்தியாவின் விமோசனம்

#### வகுப்பு ஒற்றுமை அவசியம்

"எல்லா வகுப்புகளும் ஒற்றுமைப்பட்டால்தான் இந்தியா விமோசனமடைய முடியும்" என்று ஜனாப் ஜின்னா கல்கத்தா சர்வகலாசாலையில் செய்த ஒரு பிரசங்கத்தில் கூறினார். மாணவர்கள் எந்த ஜாதியைச் சேர்ந்தவர்களாயிருந்தாலும் ஒத்து வாழ முயலவேண்டுமென்றும் அவர்கள் அபிப்பிராயங்களை ஒருவருக்கொருவர் எடுத்துரைத்துக்கொள்ளுவதற்கு கலாசாலையிலிருக்கும் காலம்தான் தக்க காலமென்றும் வகுப்பு ஒற்றுமைக்கு முன்னுவரு கட்சியை எதிர்பார்த்து நிற்கும் வரையில் அவர்கள் சுயராஜ்யம் பெற யோக்கியதையுடையவர்களாக மாட்டார்களென்றும் ஜனாப் ஜின்னா கூறினார்.

ஒரு மங்கையுடன் காதல் ..., பின்னர் அவ்வணங்கையே மணக் வண்டுமென்ற சீரிய எண்ணத்திற்குத் தனவணிக சமூகம் இன்றிருக்கும் நிலைமையில் அதில் சிறிதும் இடமில்லையென்பது தேற்றமாய்விட்டது. அதற்குக் காரணம் இன்றையத் தனவணிக சமூகத்தில் கல்வி கற்ற அறிவுடைப் பெண்கள் அருகியிருப்பதாலும் அதன் விளைவாய் புனிதக் காதலின் உண்மைத் தாத்பரியம் அவர்கட்குத்தெளிவு படாதிருத்தலேயாகும். எனவே இத்தன வணிக குலத்திலேயே ஒரு காரிகையை (பின்னர் கல்வியறியூட்டிப் புனிதக் காதலை விளக்கி அதை இன்புற இருவரும் நுகர்வோம் என்ற திடமான நம்பிக்கையுடன்) யான் வதுவை புரிந்ததானது எவ்வகையாலும் வாசகர்கட்கு வியப்பை தராதென்றே துணிகிறேன்.

எங்கள் வாழ்க்கையாரம்பத்தில் "வாழ்க்கை" செல்லும் வழியில் "வழக்கம்" என்ற முட் செடிகள் அடர்ந்து மண்டிக்கிடப்பதுடன் காடுமுரடாகவுமிருப்பது கண்டு உண்மையிலேயே மலைத்துவிட்டேன். ஆனால் மறுகணத்தில் சே! என்ன பேதை மனமிது இதைக் கண்டஞ்சுவது எம்போன்ற வாலிபர்கட்கு அழகல்லவே! என மனவுறுதி கொண்டு உற்சாகத்துடன் அவ்வழியைத் துப்புரவு செய்யும் பெரும் பணியில் தன்னந் தனியனாய் ஈடுபட்டேன். அவ்விதமே அக் கடமையில் வெற்றியடைந்து, அவ்வழி கடந்து "வாழ்க்கையின் புனிதமான சீரிய இலக்ஷியத்தையடைந்தோம். இனி என்பின் தோன்றும் இளம் தம்பதிகட்கு "வாழ்க்கையின் இலக்ஷியத்தை"யடைய இலகுவாகுமென்றே உறுதிகொள்ளுகிறேன். அதையடைவதற்கு இச்சிறியேன் கைக்கொண்ட வைகளே கீழே தரப்படுகின்றன.

நம் சமூகத்தில் புதுமணத் தம்பதிகள் ஒருவருடன் ஒருவர் நாணமின்றி உரையாடுவதற்குச் சில சமயம் பல மாதங்கள் செல்லும்! அப்பேயானது எங்களையும் விட்டபாடில்லை. ஆனால் என்னைமட்டும் அப்பேய் சிறிதும் ஆட்டிவைக்கமுடியவில்லை! என் மனைவி சம்பந்தப்பட்ட வரையில் தான் அதன் திருவிளையாடல்கள் பலித்தன. இனி வெட்கப்பட்டாவ தென்ன? உங்களிடம் சொல்லாமல் வேறெவரிட முரைப்பது? நானென்றால் என்மனைவியைத் தனியே சந்திக்கும் சந்தர்ப்பத்தை வேண்டி எத்துணைநாள் தவங்கிடந்திருப்பேன் தெரியுமா? அவைகளில் வெற்றியடைந்தது முண்டு, ஏமாறியது முண்டு. இவையெல்லாம் உங்கட்கு ஆச்சர்யமாகத் தான் தோன்றும்! என்னமோ போங்கள். நீங்கள் நம்பினாலும் சரி நம்பாவிட்டாலும் சரி, யான் கூறுபவை நடந்த தென்னமோ உண்மைதான்!

ஒரு நாள் சாய்மான நாற்காலியில் சாய்ந்து கொண்டு அன்றுவந்த பத்திரிகையைப் புரட்டிக் கொண்டிருந்தேன். அப்பொழுது அப்பக்கமாக வந்த என் மனைவிமீது என் பார்வை விழுந்தது. உடனே பத்திரிகையைத் தூரவீசி விட்டு அவளைப் பின் தொடர்ந்தேன். அறைக்குள் ஏதோ எடுத்துக் கொண்டிருந்தாள். திடீரென அவள் கையைப்பிடித்துக் கொண்டு, "இங்கேபார்! நான் உன்கணவன்! நீ என்மனைவி! இதில் ஏதும் சந்தேகமில்லையே! அப்படியிருக்க நம்மிருவரும் எவ்வளவு காலம் தான் பேசாமலிருப்பது? எங்கே உன் வாயைத்திற!" என்றேன். அவ்வளவு தான் அவளுக்கு நாணம் வந்துவிட்டது போலிருக்கு! தானேடுத்த குங்குமடப்பியை அப்படியே போட்டுவிட்டு, என் கைகளையும் உதறிவிட்டு எடுத்தாளையா ஓட்டத்தில்! தரையில் வீழ்ந்த குங்குமடப்பியிலிருந்து நாலாபக்கமும் குங்குமம் சிதறிவிட்டது. இப்படியே கிடந்தால் என் தாயார் அதைக்கண்டு, பேதையாகிய என் மனைவிமீது வீணேபழி சுமத்திவிடுவாளென அஞ்சி, சிதறிய குங்குமப் பொடியையெல்லாம் அவசர அவசரமாக டப்பியில் சேர்த்து, இருந்த இடத்தில் வைத்துவிட்டு, கொட்டிய இடம் தெரியாமல் வாயால் ஊதி அவ்விடத்தைச் சுத்தம் செய்து விட்டேன்.

முன் கூறிய செய்கை நடைபெற்றதிலிருந்து நானிருக்கும் பக்கமே தலைகாட்டாதிருக்கத் தலைப்பட்டு விட்டாள் என்மனைவி.

# புதுமை வாழ்க்கை

"சாமு"

எனக்கு வேறு வழி தோன்றவில்லை. எனவே யாருமில்லாத சமயம் பார்த்து சமயலறைக்குச் சென்றேன். அங்கு என் மனைவி அடுப்பு வேலையிலிருந்தாள். "அப்பா! இப்பத்தான் சமயம் வாய்த்தது! இத்தனை நாளும் நாம் பேசுவதற்குத் தடையாய் எத்தனை பேர் குறுக்கில் நின்றனர்! இனி என்ன தடை? ஏன் பேசுவதற்கு வெட்கப்படுகின்றாய்?" என அவளை அணுகினேன். அதற்குள் பாழும் கதவில் "டக் டக்" என்ற சப்தம் எழுந்தது. போய்க் கதவைத் திறந்தேன். "என்னடா வேஷ்டியில் அடுப்புக்கரி?" என்று கேட்டான் உள் நுழைந்த என் நண்பன் சுந்து. அப்பொழுதுதான் எனக்கு ஞாபகம் வந்தது, ஆஹா! நம்மளை அறியாமல் அடுப்பங்கரையில் வேஷ்டியில் கரி பட்டுவிட்டதென்று. ஆனால் அந்த வியப்பை முகத்தில் வருவித்துக்கொள்ளாது, "இல்லையடா! பற்பொடி வேஷ்டியில் கொட்டிவிட்டது" என்று சமாளித்துக்கொண்டேன். யான் இவ்வாறு கூறியதும் அடுப்படியிலிருந்து 'களுக்' என்ற சப்தம் என் காதுகளை ஊடுருவிச் சென்றது!

கல்வியறிவில்லாப் ... பண்ணுயிருப்பதால் தானே பேசுவதற்குக் கூட இவ்வளவு கஷ்டமாயிருக்கிறதென யான் சிலசமயம் மனம் உடைந்ததுமுண்டு. ஒவ்வொரு வாலிபன் என்னென்ன காரியமெல்லாமோ சாதித்து விடுகிறான். என்னால் இவ்வற்ப காரியமும் ஈடேற்றுவிக்க முடியவில்லையே யென என் தைரியத்தையும் நான் நொந்துகொண்டதுண்டு! என்றாலும் என் முயற்சியில் சிறிதும் சலிப்படையவில்லை!

இவளை எவ்விதம் நம்முடன் நாணம் விடுத்துப் பேசும்படி செய்வதென ஒருநாள் முழுதும் ஆழ்ந்து யோசனை பண்ணினேன்.

கடைசியில் ஒரு யோசனை தோன்றியது. என் மனைவி தினம் ஸ்நானத்திற்குப் பின் மேன்மாடிக்குச் சென்று கூந்தலைச் சீவிப் பின்னித் தன்னை அலங்கரித்துக்கொள்வதுண்டு. அதற்கு வேண்டிய சாமான்களை ஒரு அலமாரியில் வைத்திருந்தாள். அதில் ஒன்றை எடுத்து ஒளித்து வைத்துவிட்டு வேடிக்கை பார்ப்போமென்பது அந்த யோசனை.

அதன்படியே செய்தேன். வந்தவள் சீப்பைக் காணேமென்று அலமாரி முழுதும் பிரித்துக்கொண்டிருந்தாள். நான் ஒன்றும் தெரியாதவன் போல், "யாரங்கே சாமான்களை உருட்டிக்கொண்டிருப்பது?" என்றதட்டிக்கொண்டே மேலே சென்றேன். மேலே சென்று பார்த்த போது அவளைக் காணோம். என் குரல் கேட்டதோ இல்லையோ மற்றபடிக் கட்டு வழியாகக் கீழே ஓடிவிட்டிருப்பாள் என் பதை அப்பொழுதேயூகித்துக்கொண்டேன். என்ன இது! எல்லாவற்றிலும் ஏமாற்றம்!

இன்னொருநாள் எல்லோரும்—என் மனையாட்டியைத் தவிர—வெளியே போனசமயம். ஒரு யுக்திபண்ணி, ஐயோ! தேள் கொட்டி விட்டதே! காமு! இங்கே ஓடிவா! சீக்கிரம்! சீக்கிரம்!" என்று உரக்கக் கத்தினேன். அதைக்கேட்ட என் காமு திடுக்கிட்டு ஓடோடி வந்தாள். "ஐயோ! எந்த இடத்தில் கடித்தது? சும்மா இருக்கமாட்டேனென்கிறீர்களே!" எனப் பதட்டமுடன் வினவினாள். "மேன்மாடிக்குச் சென்று தேள்கடி மருந்தை எடுத்துவா சீக்கிரம்!" என்றேன். உடனே மாடிக்கு ஓடினாள். பாவம்! உண்மையென்றே நம்பிவிட்டாள்! அவள் அலமாரியில் மருந்தைத் தேடிக் கொண்டிருக்கும்பொழுது, நான் மெதுவாய்ப் பின்சென்று அவள் கரங்களை இறுகப் பிடித்துக்கொண்டேன். அவ்வளவுதான்! போராச்சர்யம் அவளைத் தாக்கிப் போட்டு விட்டது! "பரவாயில்லை, நீ சிரமப்பட வேண்டாம். தேள்கடி சொஸ்தமாகிவிட்டது" என்றேன். "கடைசியில் இந்தக் கள்ளச்செய்கையைக் கைக்கொள்ளத் தீர்மானித்துவிட்டீர்களாக்கும்! உம்!" என்றாள். "என்ன அப்படிச் சொல்லுகிறாய்? யான் யார் சொத்தைக் களவாடஎத்தனித்தேன்?" என்றேன்.

காமு:—உம்......! இப்பொழுது என்னை என்ன செய்யவேண்டுமென்கிறீர்கள்?

நான்:— உன்னைப்பற்றிய சிலவற்றை நான் அறியவேண்டும். பதிலுரைப்பாயா?

காமு:—உம்......!

நான்:—நீ எவ்வளவு வரை வாசித்திருக்கிறாய்?

காமு:-நாலாவது புஸ்தகம்வரைபடித்தேன்.

நான்:—ஏன் அதற்குமேல் படிக்கவில்லை?

காமு: பெரியபிள்ளையாய் விட்டேனென்று என் தாயார் என்னைப் பள்ளிக்கூடம் அனுப்பாது நிறுத்திவிட்டாள்.

நான்:—சபாஷ்! பெரும் புத்திசாலிகள் ஆமாம், நீ அதற்கு என்ன செய்வாய்? இனி நான்காவதிலிருந்து சொல்லித் தருகிறேன் படிப்பாயா?

காமு:—படித்ததெல்லாம் மறந்து விட்டதே! பள்ளிக்கூடம் போய் ஆறு வருஷத்திற்கு மேலாச்சே!

நான்:—சரி! சரி! என்னைப் பிடித்த கஷ்டகாலம்! யாரைக் குறை கூறுவது? ஆரம்பத்திலிருந்துதான் படிக்கிறாயா?

காமு:—உம்.........

அன்றிலிருந்து அவனிடம் குடிகொண்டிருந்த நாணத்தில் பாதிக்குமேல் பிரியாவிடை பெற்றேகி விட்டது.

விஷயத்தைச் சுருக்கி விடுகிறேன். நான் அன்பாகவும், இலகுவாகவும் பாடங்களைக் கற்பித்தேன். அவளும், பேரார்வத்துடன் துரிதமாகக் கற்று வந்தாள். ஓரே ஆண்டுக்குள் நன்கு படிக்கவும் எழுதவும் தெரிந்து கொண்டாள். நான் சேர்த்து வைத்திருந்த அறிவு வளர்ச்சிக் கேதுவான புத்தகங்களைப் படிக்கும்படி செய்தேன். உலக நிகழ்ச்சிகளை அறிய வேண்டி பத்திரிகைகளைத் தருவித்துக் கொடுத்தேன்.

வேலையற்ற நேரங்களில் மற்றவர்களைப் போன்று வீணே ஊர் வம்பளந்துகொண்டிருக்க மாட்டாள் என் மனைவி. அவ் வேலையில்லா நேரத்தை அறிவு வளர்ச்சிக் கேதுவானவைகளைக் கற்று நன் முறையில் கழிப்பாள்.

ஊரார் இதெல்லாம் கண்டு ஏளனம்தான் செய்தார்கள்! விஷமக்காரர்களெல்லாம் கேலிதான் செய்தனர்! இது கண்டு எங்கள் இளம் உள்ளம் சலிப்படையவுமில்லை! சட்டை செய்யவுமில்லை! தைரியத்தையுமிழக்கவில்லை! பேதைச் சமூகம் எதையும் உளறிக் கொட்டட்டுமென்று வாளாவிருந்து விட்டோம்.

என் துணைவிக்கு அறிவு முதிர முதிர வாழ்க்கையின் இலட்சியம் இன்னதென நன் குணர்ந்து கொண்டாள். கணவனும் மனைவியும் எவ்விதம் ஈருடலும், ஓருயிருமாய் ஒன்றி வாழவேண்டுமென்பதனை அறிந்து கொண்டாள். தன் குடும்பத்திற்கு ஏதும் இழுக்கு நேரிடாதபடி எவ்வாறு நடத்துவ தென்பதையும் தெரிந்து, காலத்தை வீணே செலவிடலாகாது என்பதையும் உணர்ந்து கொண்டாள். சுருங்கக் கூறின் தனவணிக மாதர்களாற்றும் நாகரிகமற்ற செய்கைகளிலிருந்து தப்பித்து முற்றும் திருந்திவிட்டாள் என்றே கூறிவிட வேண்டும்!

என் முயற்சி பலித்தது. அதன்பின்தான் என்மனம் நிம்மதியுற்றது. அதன்பின்தான் நாங்கள் காதல் வாழ்க்கை ஆரம்பித்தது! அவள் என்னைக் காதலனென்றும், நான் அவளைக்காதலி யென்றும் அழைத்ததும் அதற்குப் பின்னேதான்! எங்கள் வாழ்க்கை புனித மடைந்தது!

எங்கிருப்பினும் ஒருவருக் கொருவர் கூசாது எந்த இரகசியத்தையும் கடிதமூலம் தெரிவித்துக் கொள்ளத் தயங்கவில்லை ஏனென்றால் அதையறிவது அவளும் நானும் தானே!

காமு ஒருநாள் நிம்மதியாய் நித்ராதேவியிடம் அடைக்கலம் புகுந்திருக்கும் போழ்து, அவள் பக்கலில் மெதுவாகச் சென்று, அவளின் செவ்விதழ்களில் அப்படியே ஒரு இன்பமுத்த மீந்தேன்! அவள் திடுக்கிட்டெழுந்து சிறிது அப்பால் ஒதுங்கி நின்றாள். "காமு! இதுதான் காதல்—முத்தமென்பது! இதன் சுவையை நீ ஒருநாளும் அறிந்ததில்லையன்றோ?" என்றேன் புன்னகையுடன். கடைக்கண்ணால் என்னை நோக்கினாள்.

அதுமுதல் நாங்களிருவரும் தாராளமாய் ஒருவருக்கொருவர் முத்தத்தை மாற்றிக் கொண்டோம். எங்களில் ஒருவரை யொருவர் எழுப்ப நேர்ந்த போழ்தும் இம்முத்தம் தான் பேருதவியாக விருந்தது.

காமுக்காகவே நான் பிறந்தேன்! எனக்காகவே அவள் பிறந்தாள்! இதை இருவரும் நன்கறிவோமாதலாலும், எங்கள் மனம், உயிர் அனைத்தும் ஒன்றாய் விட்டமையாலும் ஒருவரை யொருவர் பிரியவே மனம் ஒப்போம். கோவலன்—கண்ணகி போலும், இராமர்—சீதைபோலும், நள—தமயந்தி போலும். சத்தியவான்—சாவித்திரிபோலுமாகிவிட்டோ மென்றே சொல்லி விடலாம். இனியாரும் உவமையாகக் கூறவேண்டுமானால் தாராளமாய் எங்கள் பெயரைக் குறிப்பிடலாம்!

எந்தத் துப்பறிவோரும் துப்புத்துலக்கி நாங்கள் யாரென்பதை யறியச் சிரமப்பட்டு முன்வரவேண்டா மென்று எச்சரிக்கிறேன்! மீறி முயற்சித்தால் நிச்சயமாய் ஏமாற்றம் ஏற்படும்! இத்துணை துணிவோடு யான் கூறுதற்கு க்காரணம் என் கண்மணி காமு "ஸ்வப்னலோக"த்திலிருப்பதாற்றான்!









# சில தேச மன்னர்களின் விபசார வாழ்க்கை

## அந்தப்புரங்களில் லீலா விநோதங்கள்

## "பெண்களைக் கொண்டுவருவது ராஜபக்தியாம்"

ஒரு சமஸ்தான மன்னர் தமது சமஸ்தானத்தைவிட்டு வெளியே இந்தியா கவர்ன்மெண்டாரின் அனுமதியின்றிப் போகக்கூடாத காலமொன்றிருந்தது. யுத்தத்திற்குப் பிறகு நிலைமை மாறிவிட்டது. மழைக்காலத்தில் தமாஷாவாகப் பொழுதுபோக்க கல்கத்தா (கிறிஸ்தமஸ் பண்டிகை காலம்) விசேஷ ஸ்தலங்களில் ஒன்று. குதிரைப் பந்தயங்களுக்காகவென்றே கல்கத்தா நகரில் ஒவ்வொரு வருஷமும் ஏராளமான காலத்தைக் கழிக்க விரும்பும் மன்னர்களுக்குக் கணக்கில்லை. அதுபோலவே டில்லியில் மன்னர் சபை கூடும் காலமும்; அதற்கு 'மன்னர்கள் வாரம்' என்பதே மறு பெயர். வெளிநாடுகளில் யாத்திரை செய்யும் மன்னர்களுமுண்டு.

ஒரு மன்னர் தம் கோடைக்காலத்தை வெளித்தேசங்களில் செலவிடக் காரணங்கள் பல; அவற்றுள் முக்கியமானது ஆரோக்கியம் சம்பாதிப்பது! இந்தியாவானது ஒருவனது ஒழுக்கத்தை நன்றாகச் சோதித்துவிடுகிறது என்று லண்டன் 'டெயிலி மெயில்' பத்திரிகையில் ஒரு நிருபர் எழுதியிருந்தார்; மன்னர்களைப் பற்றியவரையில் இந்தியா அவர்களுடைய ஆரோக்கியத்தையே சோதிக்கிறது. டெல்லியில் ஒரு வாரம் மகத்தான வேலைத்தொல்லை; இரண்டு வாரங்கள் தம் சமஸ்தானங்களில்; ஸ்பெஷல் டிரெயினில் ஒருவாரகாலம். பிறகு உடலைத் தேற்றிக்கொள்ள பாரிஸ் நகரிலோ நீஸ் (Nice) நகரிலோ ஒன்பது மாத காலம், மிகவும் அவசியமேயன்றோ? இப்படிப்பட்ட வாழ்க்கையின் பயனைப்பற்றி ரைட் ஆனரபிள் சீனிவாச சாஸ்திரியார் சொற்களால் விளக்குவோம்:—

"அநேக மன்னர்களை அவர்களுடைய அரண்மனைகளில் காணமுடியாது. அவர்களது பிரஜைகளின் பணத்தைக்கொண்டு சுகானுபவங்கள் எங்கெங்கு கிடைக்குமோ அங்கெல்லாம் அவர்களைக் காணலாம். நீங்கள் லண்டனுக்கோ பாரிஸுக்கோ அல்லது தமாஷாக்களுக்குப் பெயர்போன எவ்விடத்திற்காவது சென்று பாருங்கள்! அங்கே இந்திய ராஜாக்களில் ஒருவராவது பொழுது போக்குவதைக் காணலாம். தம்முடைய டாம்பீகத்தால் ஐரோப்பியரை மயக்கிக் கொண்டும் தமக்குச் சமீபம் நெருங்கியவர்களைக் கெடுத்துக் கொண்டும் அவர் இருக்கும் காட்சியைக் காண்பீர்கள்."

(கொச்சி உபந்யாசம்)

சமஸ்தான மன்னர் லண்டனுக்கோ பாரிஸுக்கோ வந்துசேரும் போதுள்ள நிலைமையைப் பற்றி சொல்ல வேண்டுமோ? மந்திரிகளின் பெரிய சிப்பந்திக் கூட்டம் காரியதரிசிகள் வேலைக்காரர்கள் என்று மகத்தான கூட்டம்; பல சமயங்களில் பெண்கள் கூட்டம் இருபது முப்பது என்று ஏற்படும். இவர்கள் தங்குவதற்கு, நூதன டாம்பீகங்களில் சிறந்த ஹோட்டல்களில் ஒரு மாடி முழுமையும் பேசிவிடுவார்கள். பாண்டு ஸ்ட்ரீட்டிலும் ரூயே டிலா பாயி வீதியிலுமுள்ள ஷாப்புகளில் ஏராளமான வியாபாரம் இவர்களுடையதே.

விண்ட்ஸர் என்னுமிடத்தில் பிரிட்டிஷ் மன்னர் அரண்மனையிருக்கிறது அதற்கடுத்தாப் போல் ஒரு சமஸ்தான மன்னரும் வசிக்கிறார். பிரிட்டிஷ் இந்தியாவிலுள்ள ஒரு ஜில்லாவை விடச் சற்று பெரிய ராஜ்யம் இவருக்கு உண்டு. இம்மன்னர் வாசஸ்தலத்தைச் சேர்ந்ததாகப் பந்தயக்குதிரை லாயங்களும், போலோ குதிரைகளும் மோட்டார் கார்கள் வைக்கும் பல ஷெட்களும் உண்டு. இவ்வற்றை யெல்லாம் கவனிக்க ஒரு சைன்யம் சிப்பந்திகள்.

எண்ணூறு சதுரமைல் விஸ்தீரணமுள்ள ஒரு சுதேச சமஸ்தானாதிபதி தம் செலவில் சில வருஷங்களுக்கு முன் அமெரிக்காவுக்கு ஒரு இந்தியபோலோ டீம் அழைத்துச் சென்றார். செயிண்டு ஜர்மனுக்கு அருகில் ஒரு மகாராஜாவுக்கு ஜாகையிருக்கிறது.பக்கத்திலுள்ள பழயகால பிரஞ்சு பிரபுக்கள் பாபரென்று நினைக்கும் வண்ணம் அவ்வளவு விரிவான சிப்பந்திகளை அவர் அங்கு வைத்திருக்கிறார். பாரிஸில் கழிக்க வேண்டிய காலங்களை அவர் தவற விடுவதில்லை. பாரிஸில் அம் மகாராஜா நடத்தும் விருந்துக் கச்சேரிகளின் அழகையும் பெருமையையும் கண்டு பாரிஸ் அதிசயித்து நிற்கும்.

மற்றொரு மகாராஜா பிரான்ஸில் பந்தயக் குதிரை லாயங்களில் அரை டஜனும் ஸ்காட்லாந்தில் வேட்டையாட ஏற்பட்ட சாதனங்களும், சிப்பந்திகளும், பாரிஸில் ஓர் அறையும், ரிவிராவில் உல்லாச மாளிகையொன்றும் வைத்திருக்கிறாராம். மாண்டி கார்மோவிலுள்ள சர்வதேச ஸ்போர்டிங் கிளப்பில் சூதாட்டத்தில் ஒரு சமஸ்தான மன்னர் ஒரே நாள் மாலையில் பத்து லட்சம் பிராங்குகள் நஷ்டமடைந்தாரென்று சொல்லப் படுகிறது.

டாம்பீக எல்லை

வெளிநாடுகளுக்குப் போகாத காலங்களில் கோடையை முலோரியில் மன்னர்கள் கழிப்பார்கள்; குன்றுகளின் மீதுள்ள ஓர் இடத்தில் கழிப்பதும் வழக்கமுண்டு. இங்கெல்லாம் சமஸ்தானாதிபதிகள் காட்டும் உதார குணத்திற்கு உபமானம் வேண்டுமானால் அராபியன் நைட்ஸ் கதைகளில் தான் தேட வேண்டும். ஸோமுரியில் பொது ஜனங்களைத் திரட்டும் ஒரு விசேஷம் சொல்லப்படுகிறது. புமீசத்துவம் அல்லது ஆண்மையின் பலத்தைச் சோதிப்பதேயாம். இதற்கு ஒரு மன்னர் ஒரு கப் வெகுமதி ஏற்படுத்தியிருக்கிறார். இந்தப் போட்டியில் நடைபெறும் காரியங்கள் கூறுவதற்கும் தகுதியற்றவை.

எவ்வளவோ மன்னர் இங்கிலாந்தில் விலையுயர்ந்த எஸ்டேட்களை வாங்கியிருக்கிறார்கள். பிறகு கார்கள், போலோ குதிரைகள், வெள்ளைக்காரப் பெண்கள் ஆகியவைகளுக்கு எல்லையில்லை. ரோல்ஸ் ராய்ஸ் கார்கள், ஒவ்வொன்று அரை லட்சம் ரூபாய்க்கு குறையாத டஜன் கார்கள் வாங்கிய மன்னர்களுமுண்டு. டர்பி பந்தய வெற்றியடைந்த குதிரைகளுக்கு பேரஞ்செய்து வாங்கக்கூடிய கூட்டத்தில் இந்திய மன்னரும் சேர்ந்தவர்கள். இக் குதிரைகளில் ஒன்றுக்கு லட்சம்பவுன் விலை பேசப்பட்டதைப் பலர் அறிவர்.

சயன சுகத்திற்குக் கேட்க வேண்டுமோ? லண்டன், பாரிஸ் நகரங்களில் சங்கீதத்திற்குப் பெயர்போனவர்களே மன்னரின் துணைவர்கள். ஒரு சாதாரண மன்னர் லண்டனில் மூன்று வாரங்கள் தங்கியபோது பெண்களுக்காக 6000 பவுன் செலவுசெய்த[illegible] நேரில் தெரியும்.

வெளிநாடுகளில் செலவிடு[illegible] போலவே தம் சமஸ்தானங்களி[illegible] செலவு செய்வார்கள். எதுவும் அ[illegible] ளுக்குத் திருப்தியளிப்பதில்லை; [illegible] றோரு வெளிச்சமுள்ள கார்கள், [illegible] பாளங்கள், வெள்ளிப் பாளங்கள் பதி[illegible] ப்பெற்ற கார்கள், மனிக்கு [illegible] செல்லும் கார்கள், இன்னும் செ[illegible] வேண்டுமா? கார்களுக்குள்ளே [illegible] பெண்ணுடன் நீ எதுவேண்டு[illegible] செய்துகொள்ளக் கூடிய கார்கள், [illegible] ரைப்பந்தய ஸ்தலங்களில் லாயங்க[illegible] பெண்களும்-போதுக்குச் சேர்த்த [illegible] ப்படிகள்-ஆகிய எல்லாம் உண்டு. [illegible] நீலம் பாய்ந்த கண்களுடன் உயர்[illegible] மெலிந்து விளங்கும் வடதேசப் பெண்[illegible] கள், வாசனை யூட்டப்பட்ட சுருட்டை மயிருடன் கூடிய மெல்லிய [illegible] ளுட்டுப் பெண்கள், ஆலிவ் என்[illegible] தடவிய கூந்தலுடன் மனிதரை [illegible] கும் இனிய கூறுபெண்கள், [illegible] போன்ற கூந்தலுமுள்ள [illegible] பெண்கள் முதலிய பலர்; எல்லோ[illegible] ராணிகளல்ல வாயினும் மன்னரது வா[illegible] க்கையில் பங்கு பெறுபவர்கள். அ[illegible] களைச் சமீபத்தில் வைத்துக் கொ[illegible] டால் வாழ்க்கை பழுபவும் இனிமை வைத் தரும்.

மும்டாஜ் மர்மம்

மும்தாஜின் லீலா விநோதங்கள் உலகப் பிரசித்தமாகி விட்டன. 12-வது வயதில் இவள் மிகச்சிறப்பான சங்கீத்திறமையடைந்து பாட்டிலும் நிறைந்த கீர்த்தியுமடைந்தாள். அத்தொழில் [illegible] பந்தமாக இந்தூர் மாஜீ மகாராஜா தர்பார் மண்டபத்திற்கு அழைக்கப்பட்டாள். பிறகு அங்கே நிலையாகவும் [illegible] தனத்தால் வாங்கக்கூடிய எல்லா[illegible] றையும் மகாராஜா அவள் முன் கொண்டுவந்து சேர்த்தார். தர்பார் அதிகாரிகள் அவளை ராணியாகவே பாராட்டினார்கள்; கமலாபாய் என்ற பெயரும் அவளுக்கு வழங்கியது. அந்த [illegible] அவள் மகாராஜாவுடன் ஐரோப்பாவுக்கும் சென்று இங்கிலாந்தையும் பிரான்ஸையும் பார்வையிட்டாள்.

பல வருஷங்கள் மகாராஜாவிடம் வசித்தபிறகு அவள் இந்தூரைவிட்டு முலோரி செல்வதாகப் புறப்பட்டு, வழியில் டில்லியில் தன்மனதை மாற்றிக்கொண்டு அமிருத சரஸுக்குச் சென்றாள். அமிருதசரஸில் மும்தாஜின் குடும்பமிருக்கிறது இவள் மகாராஜாவைப் பிரிவதென்றே நிர்மானித்தாள். இவளுடைய முப்பாட்டியார் மகாராஜா ரஞ்சித் வீட்டைச் சேர்ந்த ராணி மோரன்.

அமிருதசரஸிலிருந்து மும்தாஜ் பம்பாய்க்குப்புறப்பட்டுச் சென்று அங்கே கீர்த்திபெற்ற தனவந்தரான பௌலாவைச் சந்தித்தாள். அங்கே அவர் பயங்கர நிலையில் கொலை செய்யப்பட்டதை உலகமறியும். அதுவரையில் பௌலாவுடன் வசித்துவந்தாள். பௌலாவுக்கு ரூபா 42 லட்சம் சொத்து உண்டு. அதில் ஒரு லட்சம் மும்தாஜுக்கு அவர் எழுதி வைத்தார். அவளிடம் மும்தாஜுக்கு ஒரு பெண் பிறந்தது; அப்பெண்ணுக்கு சாதரீகம் என்று பெயர்.

பௌலா இறந்தபிறகு மும்தாஜுக்கு

(16-ம் பக்கம் பார்க்க)

## ...ரணத்தை வெல்ல வழி

### இறந்த பிராணிகளின் அங்கங்களுக்கு உயிர்!

லண்டன்

மாணத்தைப் பலவருஷகாலம் வரை ஒத்திவைப்பதற்கு உபயோகமாக இருக்கக்கூடிய உபாயமொன்றை பிரபல விமானியான சார்ல்ஸ்லிண்ட்பர்க்கும், நோபல் பரிசுபெற்ற விஞ்ஞான சாஸ்திரியான புரபஸர் அலக்ஸிஸ்காரலும் கண்டுபிடித்திருந்தனர்.

அவர்கள் "செயற்கை ஹிருதய" மொன்றை சிருஷ்டித்திருக்கிறார்கள். அது சம்பந்தமாக அவர்கள் சென்ற பல வருஷகாலமாகச் சோதனை நடத்தி வந்திருக்கின்றனர், ஒரு கண்ணாடிப் பெட்டிதான் அந்த "ஹிருதயம்". உயிரற்றுப்போன அங்கங்களை அதில் வைத்து அப்பெட்டியிலுள்ள சிறு அறைகள் மூலம் செயற்கை ஹிருதய அடிப்பால் செயற்கை ரத்தத்தையும், காற்றையும் அப்பெட்டிக்குள் செலுத்திவந்தால் அந்த அங்கங்கள் எப்பொழுதும் உயிருடனிருக்குமாறு செய்யலாம்.

இவ்வுபாயத்தைக் கொண்டு, ஹிருதய நோய், புறைப்புண், காசநோய், மூத்திராசய நோய்கள், நீரிழிவு முதலிய நோய்களைக் குணப்படுத்தும் முறையைக் கண்டுபிடிக்கக் கூடுமென விஞ்ஞான சாஸ்திரிகள் நம்புகின்றனர்.

அவ்விருவரும் யுனைடட்ஸ்டேட்ஸில் ராக்பெல்லர் ஆராய்ச்சி நிலையத்தில் சில மிருகங்கள் இறந்து வெகுநேரமான பின் அவைகளின் அங்கங்களை எடுத்துப் பிழைக்க வைத்திருக்கிறார்கள்.

இந்த செயற்கை ஹிருதயம் இப்பொழுது கோபன்ஹேகன் ஆராய்ச்சி நிலையத்தில் சிறிதும் ஓய்வின்றி இராப்பகலாக வேலை செய்து கொண்டிருக்கிறது.

புரபஸர்காரல் மரணத்தை ஒத்திவைப்பதற்கான வழியைக் கண்டுபிடிப்பதில் மும்முரமாக ஈடுபட்டவர். எனினும், அவர் தமது முயற்சி வெற்றி அடையுமாயின் அதனால் பெருங்கேடு விளையுமெனப் பலமுறை எச்சரித்துள்ளார்.

மேலும் அவர் தெரிவிப்பதாவது:- "எனது ஆராய்ச்சியின் மூலம் மனித ஆயுள் திடீரென 100 வருஷமாக அதிகரிக்கப்படுமாயின், அதனால் ஏற்படும் பொருளாதாரக் கஷ்டங்கள் நாகரீகத்தைக் குலைத்துவிடும்.

மரணமானது இவ்வுலகினின்றும் பலவீனர்களையும், நோயாளிகளையும், முட்டாள்களையும் அகற்றிவிடுகிறது.

மரணமே ஏற்படாதிருந்தால் நன்மை யேற்படுமென்பதில் எனக்கு நம்பிக்கையில்லை."

---

திரு. பிச்சர் என்பவர் லண்டன் சர்வகலாசாலையில் பி. எஸ் ஸி. பரிட்சையில் தேறியிருக்கிறார். இவர் ஊமை, காதும் செவிடு. இவ்விதமிருந்தும் இவர் முதல்தரமாகத் தேறியிருக்கிறார்.

## நடுக்ஷவரத்தில் காந்திஜி சந்தேகம்

### "ஹரிஜனுக்கு வேலைசெய்வாயா"

### நாவிதர் பதிலால் மகாத்மா தயக்கம்

### இறுதியில் நாவிதர் கொடுத்த வாக்குறுதி

சென்றவார "ஹரிஜன்" பத்திரிகையில் ஸ்ரீ மகாதேவ தேசாய் பின்வரும் ருசிகரமான விவரத்தை எழுதியிருக்கிறார்:—

ஒருநாள் காலை நான் செகோயானுக்குச் சென்றபோது, காந்திஜி தலைமயிர் வெட்டும் மெஷின் ஒன்றை அக்கக்காகப் பிரித்து சுத்தம் செய்து எண்ணெய் போட்டிருக்கக் கண்டேன். அந்த வேலை முடிந்ததும் ஒரு நிலைக்கண்ணாடியை எதிரே வைத்துக்கொண்டு, தம் தலைமயிரைத் தாமே கத்தரித்துக் கொள்ள ஆரம்பித்தார்.

எங்களுக்குப் பரிச்சயமான ஒரு சாதுவின் சிஷ்யரொருவர் இச்சமயம் உள்ளே வந்துசேர்ந்தார். அவர் ஒரு நாவிதர்.

மற்றோர் மூலையில் உட்கார்ந்திருந்த சாது "பாபுஜி" என்று கூப்பிட்டு, "பீமனிடம் மயிர் கத்தரித்துக்கொள்ளுங்கள். அவனுக்கு அந்த வித்தை தெரியும்" என்றார்.

காந்திஜி:—"அவனுக்கு எப்படித் தெரியும்?"

சாது:—"அவன் தொழிலே அது தான்".

காந்திஜி:—"பேஷ்! அப்படியானால், இங்கே வா, பீமா."

ஆனால், பீமன் தன் வேலையை ஆரம்பித்தானே இல்லையோ, காந்திஜி அவனை ஒரு கேள்வி கேட்கலானார்.

காந்திஜி:—"நமது ஹரிஜன சகோதரர்களுக்கு க்ஷவரம் செய்வதில் உனக்கு ஆட்சேபம் இராதென்று நான் நம்புகிறேன். நான் நினைப்பது சரிதானே."

பீமன் சிறிது தயங்கி நின்றுவிட்டு, "ஹரிஜனங்களைப்பற்றி என் மனதுக்குள் எனக்கு எவ்வித வெறுப்பும் கிடையாது" என்று கூறினான்.

"உன் மனதில் வெறுப்பிராதென்பதை நான் நம்புகிறேன். ஆனால், எனக்கு எப்படி க்ஷவரம் செய்திருயோ அதேமாதிரி ஓர் ஹரிஜனுக்கும் நீ க்ஷவரம் செய்வாயா?" என்று காந்திஜி கேட்டார்.

மறுபடியும் பீமன் தயங்கினான்.

இதன்மேல் சாதுவை நோக்கி, காந்திஜீ கூறியதாவது:—"என்னைப் பீமனிடம் க்ஷவரம் செய்து கொள்ளச் சொல்லுமுன்பு, இவ்விஷயத்தை முன்னடியே அவனிடம் விசாரித் தறிந்திருப்பீர்களென்றல்லவா நான் நினைத்தேன்'!

சாது:—'மன்னிக்கவேண்டும். இந்தச்சங்கதியை நான் என்னவோ மறந்து போய் விட்டேன்'

காந்திஜீ—'எனவே, நடு க்ஷவரத்தில் பீமனை நிறுத்திவிட வேண்டியதுதான் என்று நான் நினைக்கிறேன்"

பீமன்:—வேண்டாம். இது வரையில் உங்களுக்குச் சமமாக ஹரிஜனங்களுக்கும் நான் க்ஷவரம் செய்யும் வழக்கமில்லையாயினும், இது முதல் அப்படியே செய்வதாக வாக்களிக்கிறேன்.

காந்திஜீ சந்தோஷமும் ஆச்சரியமும் அடைந்தார். பீமன் சுத்தமாகக் காந்திஜீக்கு மயிர் வெட்டி விட்டான். பிறகு, தன் வரலாற்றைச் சொன்னான். தான் நாகபுரிக்கொடி சத்தியாக் கிரகத்தில் சிறை சென்றதாகவும் அப்போது சிறைக்குள் எவ்வித வித்யாசமுமின்றி எல்லாருக்கும் க்ஷவரம் செய்து விட்டதாகவும், வெளியில் வந்தபிறகே ஜனங்களிடம் இருந்துவரும் தப்பபிப்பிராயத்துக்குத் தான் கட்டுப்பட்டு விட்டதாகவும், இனித்தான் அவ்வாறு செய்வதில்லை யென்றும், பீமன் கூறினான்.



## பாதிரியின் திருவிளையாடல்

### 60 வயதாகியும் ஆசை விடவில்லை

வார்ஸா, ஆகஸ்ட் 18உ

போலந்திலுள்ள பார்ஜவீத் சமூகத்திற்கு 60 வயதான ஆர்ச் பிஷப் மைக்கேல் ஜான் சவாலஸ்கி என்பவர் தலைவர். அவருடைய அரண்மனை பிளாக் என்ற விடத்தில் இருக்கிறது. அவருடைய அரண்மனையில் எழில் மிகுந்த யுவதிகள் பலர் சூழ்ந்துகொண்டிருப்பதும் அக்கிழவர் அப்பெண்களுடன் மன்மதத் திருவிளையாடல்கள் புரிவதும் வழக்கமாம். அங்கு வேத கீதம் பாடுவதற்காக நியமிக்கப்பட்டிருப்பவர்களும் அழகுமிகுந்த பெண்களேயாம். இவ்விஷயம் வெளிப்பட்டு ஊரெங்கும் வதந்தி பலமாகிவிடவே, நீதிபதி அந்தரங்க விசாரணை செய்து, அவர் குற்றவாளியே யெனக்கண்டு, அப்பாதிரிக்கு 2 வருடக் காவல்தண்டனை விதித்தார். அவரை சிறை வழக்கபடி மொட்டை யடித்துக் கைதிகளணியும் உடையை யணியச்செய்து, தனியறை யொன்றில் கைதியாக வைத்திருக்கின்றனராம்.

## அதிக வேதனையுள்ள மூலங்கள்

ஒரு மனிதன், தான் சாதாரணமான அல்லது இரத்தம் வடியும் கடும் வேதனையுள்ள மூல வியாதிகளினால் கஷ்டப்படுகிறார் என்று அறியும்பொழுது அதனை பூரணமாகக் குணப்படுத்த சரியான முறையைப் பின்பற்ற வேண்டும். இந்த வியாதியை முதலில் கவனிக்காமல் விட்டு விட்டால் முதலில் இரத்தம் கொஞ்சகொஞ்சமாக வடியும். பிறகு பயங்கரமானதும் தாங்க முடியாத அளவில் அதிகரித்து விடுவதோடு, மலச்சிக்கல், பலஹீனம், சுரம் அடிக்கடி வந்து துன்புறுத்தும். இந்த மாதிரியான பயங்கரமான சந்தர்ப்பங்களில் அநுபவமில்லாத மருந்துகளை உபயோகிக்காதீர்கள். எப்பேர்ப்பட்ட நிலைமையிலுள்ள மூல உபத்திரவங்களையும் பூரணமாகக் குணப்படுத்துவதற்கு ஜெர்மனியில் செய்யப்பட்ட ஹாடன்சா (Hadensa) மருந்து ஒன்றுதான் மிகவும் நன்மை பயக்கக் கூடியதும், உண்மையானதுமான மருந்து ஆகும். ஆபரேஷன் செய்துகொண்டு அவஸ்தைப்பட வேண்டிய தேவையில்லை. பிரியமில்லாத மருந்துகளை சாப்பிட வேண்டிய அவசியமுமில்லை. ஹாடென்சாவை முதலில் உபயோகித்தவுடன் இரத்தம் வடிதலை நிறுத்துகிறது. ஹாடென்ஸா ஒன்றுதான் — ஐரோப்பா, அமெரிக்கா, இந்தியா, சைனா, இன்னும் இதர தேசங்களிலுள்ள ஆஸ்பத்திரியிலுள்ள பிரசித்தம் பெற்ற ரண வைத்தியர்களாலும், டாக்டர்களாலும் நன்கு உபயோகிக்கப்பட்ட மருந்து. மிகுந்த வலியுள்ள மூல வியாதியால் கஷ்டப்படுபவர்களுக்கு ஹாடென்ஸா ஒரு வரப் பிரசாதம் என்று அவர்கள் சிபார்சு செய்கிறார்கள். ஆகையால் இன்றே உங்கள் பக்கத்தில் உள்ள மருந்து வியாபாரிகளிடமிருந்துவாங்கி உபயோகியுங்கள். போலிகளைப் பற்றி ஜாக்கிரதையாயிருங்கள்.








## நமது சமூக நிலை

(அய்மென் ராம. மீனாட்சிசுந்தரம்.)

தற்சமயம் நமது சமூகம் சீர்குலைந்த நிலைமையில் இருக்கின்றது நமது சமூகத்தார் முன்னர் செய்தவைகளையே அனுசரித்து செய்து வருகிறார்கள். அவ்விதம் இன்னும் செய்து வருவார்களேயானால் நமது சமூகம் மிகவும் சீர்குலைந்த நிலைமைக்கு வந்து விடும். நமது சமூகத்தில் விதவைப் பெண்களைக் கலியாணம் செய்யக்கூடாதென்றும் விதவைப்பெண்கள் வெளியே செல்லக் கூடாதென்றும் வெள்ளைச்சேலை உடுத்த வேண்டுமென்றும் நகைபோடக் கூடாதென்றும் இன்னும் பல செய்கைகளைச் செய்து வைத்திருக்கின்றார்கள் இது போலவே தற்சமயம் உள்ள சமூகத்தார்களும் நடந்து வருகிறார்கள். இவ்விதம் நடத்தல் கூடாது. நமது சமூகத்தில் ஒருபெண்ணைத் துணையாகப் பெறுவதென்றால் அப்பெண்ணுக்கு கிரயமாக பல ஆயிரக்கணக்கான நூகள் கொடுத்து வாங்கவேண்டுமென்றும் அப்படிவாங்காதவர்களை மதிக்காமல் கேவலப்படுத்துவதென்றும் ஏற்படுத்தியிருக்கிறார்கள். இவ்விதமிருந்தால் விதவைப்பெண்களை என்ன செய்வது? சமூகத்தில் (12 வயதுள்ள சிறுவர்களுக்கும் கலியாணம் செய்கிறார்கள். அச்சிறுவர்கள் கூடிய சீக்கிரம் மரணமடைந்து விட்டால் கலியாணம் செய்து பெண்களை ஒரு சிறு அறையினுள் போட்டு அடைத்து கதவைப் பூட்டி வைக்கிறார்கள். அப்பெண் அழாதிருந்தால் வற்புறுத்தி அழ வைக்கிறார்கள். தாய்மார்களே தகப்பன்மார்களே! சமூகத்தின் நிலைமையைப் பாருங்கள். சமூகத்தில் பணம் படைத்தவர்களைப்பற்றி என்றும் கவலையில்லை. பணமில்லாத நண்பர்களுக்கு (3) குழந்தைகளிருந்தால் இரண்டு குழந்தைகளை சுவீகாரம் விட்டால் ஒரு குழந்தைக்கு கலியாணம் செய்யலாம்.

சமூகத்தில் காப்புகட்டுப் புதுமைகள் கார்த்திகைப் புதுமை என்றால் 4 நாளைக்கு சாப்பாடு பலகாரமென்றும், கலியாணமென்றால் 8 நாளைக்கு சாப்பாடு பலகாரமென்றும் அனாவசியமாக பணத்தைச் செலவழிக்கிறார்கள். இவ்விதமான செலவுகளைக் குறைத்து பெண்ணுக்கு கிரயம் வாங்காதிருந்தால் நமது சமூகத்தில் ஏழையாயுள்ளவர்கள் எல்லோரும் பணக்காரராகி விடுவார்கள். மற்ற இதர சாதிகளிலும் சில சாதிகளில் விதவைகளை கலியாணம் செய்து கொள்ளலாமென்றும் (20)வயது ஆனபிறகே கலியாணம் செய்ய வேண்டுமென்றும் பெண்ணுக்கு விலை கொடுக்கக் கூடாதென்றும் அப்படிக் கொடுத்தாலும் செலவுக்கென்று ஏதாவது சொற்பத்தொகையாய் கொடுக்க வேண்டுமென்றும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். இவைகளையெல்லாம் நமது சமூகத்தார் ஏன் கவனிக்கக் கூடாது?

---

### புதுக்கோட்டை "சந்திரோதயம்" பத்திரிகை.

ஆகஸ்ட் 23—

மேற்கண்ட பத்திரிகையின் ஆசிரியராயிருந்த எம். கே. ஸ்வாமி என்பவர் விலகிவிட்ட படியால், மேலைச்சிவபுரி, திருவாளர், சோ. பனையப்ப செட்டியார் அவர்கள் மேற்படி பதவியை ஏற்று நடத்துவதாக இன்று இந்நகர் அடிஷனல் சீப் மாஜிஸ்ட்ரேட் அவர்கள் முன்பு டெக்ளரேஷன் தாக்கல் செய்து கொண்டிருக்கிறார்கள் என்று எஸ்டேட் கமர்ஷியல் ஏஜன்ஸீஸின் புரோப்ரைட்டர்கள் அறிவிக்கிறார்கள்.

---

### காரைக்குடி ஜில்லாவைச்சேர்ந்த காங்கிரஸ்

அங்கத்தினர்கட்கு வேண்டுகோள்

நமது திருப்பத்தூர் தாலூகா மகாநாடு நடத்துவதற்கு வேண்டிய ஏற்பாடு செய்வதற்கு ஒரு கமிட்டி ஏற்படுத்தும் பொருட்டு நமது தாலூகா அங்கத்தினர்களின் பொதுக் கூட்டம் 31-8-36 திங்கட்கிழமை மாலை நான்கு மணிக்கு திருப்பத்தூர் திருவாளர் வீர. சுப்பையா பிள்ளையவர்கள் வீட்டில் நடைபெறும். அவ்வமயம் அங்கத்தினர்கள் அனைவரின் வருகையும் எதிர்பார்க்கப் பெறுகிறது என்று திருப்பத்தூர்தாலூகா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ஏ. எஸ். ஸ்ரீனிவாசன் அறிவிக்கிறார்.

## ஜில்லாபோர்டு பிரிவினை

### திரு. குமாரசாமி ராஜாவின் விசித்திர ஆக்ஷேபனை

(கண்டனூர் திரு. மு. அரங்கநாதன் எழுதுகிறார்)

15-8-36-ம் தேதி இராமநாதபுரத்தில் நடைபெற்ற ஜில்லாபோர்டு மீட்டிங்கில் ஷை ஜில்லாபோர்டு பிரிவினையைக் குறித்து பலமான விவாதங்கள் ஏற்பட்டு இருப்பதாய் பத்திரிகைகளில் வெளியாகி இருக்கிறது. சர்க்கார் இந்த போர்ட்டின் பிரிவினையைக் குறித்து இதுவரை நோட்டீஸ் அனுப்பியிருப்பதாகத் தெரியவில்லை. இந்த ஜில்லாவில் நான்கு தாலூகா போர்டுகள் இருந்த காலத்தில் அவைகளின் நிர்வாகம் சரியாக இருந்ததென்றும், அதை எட்டாகப்பிரித்தவுடன் மிகவும் சீர்கெட்டுப்போய் விட்டதென்றும் மேற்படி காரணத்தை முன்னிட்டு இந்த ஜில்லா போர்டை இரண்டாகப் பிரிக்க வேண்டாமென்று திரு குமாரசாமிராஜா அவர்களால் கொண்டுவரப்பட்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டு இருப்பதாயும் தெரிகிறது.

எந்த ஜில்லாவிலும் தாலூகா போர்டுகள் இருந்த காலத்தில் நிர்வாகம் சரியாகவே இருந்து வந்திருக்கிறது என்பதை மறுத்துக் கூறுவது நியாயமாகாது. இந்த ஜில்லாவிலும் தாலூகா போர்டுகளின் நிர்வாகம் எட்டு போர்ட்டுகளாக பிரிந்த பிறகும் சரியாகவேதான் நடந்து வந்திருக்கிறது என்பதை தவிர மிகவும் சீர் குலைந்து விட்டதென்பது பொருத்தமாகாது. "நிர்வாகம்" என்பதன் பொருள் தெளிவாக உணரப்படவேண்டும். ஆனால், ஏற்கனவே, சரிவர நிர்வகித்து வந்த நான்கு தாலூகா போர்டுகளை பிரித்ததின் நிமித்தம் அனாவசியமாக ஆபீஸ் நிர்வாகச் செலவு அதிகரித்து பணமுடை ஏற்பட்டதென்பதை எவரும் மறுக்க முடியாது.

மேற்சொல்லிய நான்கு தாலூகாபோர்டுகள் இருந்த காலத்தில் போர்டு எலிமெண்டரி ஸ்கூல்களின் நிலைமை இப்போதைக் காட்டிலும் பொதுவாக திருப்திகரமாகவே இருந்து வந்திருக்கின்றன. சுகாதார விஷயங்களும், நீர் வசதி ஏற்பாடுகளும், ரஸ்தாக்கள் முதலியவைகளும் நன்கு கவனிக்கப்பட்டு வந்திருந்தன. ஜில்லா போர்டுகளின் நிர்வாகத்தில் விஸ்தீரணப் பெருக்காலும், இதர சில காரணங்களாலும், தாலூகாப் போர்டுகளால் கவனிக்கப்பட்டு வந்த அளவுக்கு பாதிகூட பொது ஜனங்களுக்கு நன்மை பயக்கக்கூடிய மேற்சொல்லிய விஷயங்கள் கவனிக்கப்பட்டு வருவதாய் எவரும் சொல்ல இயலாது.

உதாரணமாக தாலூகாப்போர்டுகளின் நிர்வாகத்தில் குக்கிராமங்களிலும் ஸ்கூல்கள் புதிது புதிதாய் ஏற்படுத்தப்பட்டு பாமர மக்களின் கல்வி அபிவிருத்திக்கு சாதனம் அளிக்கப்பட்டது. பணமுடை என்ற காரணத்தால், ஜில்லா போர்டுகள் ஷை ஸ்கூல்களில் சிலவற்றை ஒவ்வொன்றாக விழுங்கி விட்டன. ஸ்கூல்களின் தேவைக்குத்தக்கவாறு தாலூகா போர்டுகள் திட்டம் செய்திருந்த உயர்ந்த வகுப்புகளையும் தலைமுழுகி தகுந்த போக்கிபெறாதபடி [illegible] ரியர்களையும் குலைத்தும் குட்டிச்சுவராக்[illegible] பெருமை ஜில்லாபோர்டுகளின் நிர[illegible] பொருந்திய நிர்வாகத்திற்கே உரியதா[illegible]மென்பதை திரு. குமாரசாமி ராஜா அவர்களும் அவர்களின் சகாக்களும் அறிவார்களாக.

கிராமாந்தர ஸ்கூல்களில் உள்ள உபாத்தியாயர்கள் தாலூகாப்போர்டுகள் நிர்வாகத்தில் அந்தந்தக் கிராமங்களிலேயே தங்கியிருந்து தங்கள்கடமைகளைக் கூடியவரை சரியாகவே செய்து வந்தார்கள். சில தாலூகாப் போர்டுகளில் ஷை ஸ்கூல்களை வருஷத்தில் மூன்று அல்லது நான்கு முறை நேரில் பார்வையிட்டு அவைகளின் குறைவுகளை அப்போதைக்கப்போது நிவர்த்தித்து, ஆசிரியர்கள் தங்கள் வேலைகளை செவ்வனே நடத்தும்படி மேல்பார்வையாளர் (சூப்பர்வைசர்)களை ஏற்படுத்தி இருந்தார்கள் ஆனால், ஜில்லாபோர்டுகளின் நிர்வாகத்தில் சிற்சில விடங்களில் ஆசிரியர்கள் ஸ்கூல்களை பெட்டியாக பூட்டிவிட்டும், அவர்களுக்கு இஷ்டமான இடங்களில் இருந்து கொண்டும் தங்களுக்குரிய சம்பளங்களை பெற்றுவருவதை எவரேனும் மறுக்கமுடியுமா? ஆசிரியர்களின் சம்பளம் குறைக்கப்பட்டும் ஜில்லாபோர்டு கல்வி ஆபீசர் முதலிய நிர்வாக உத்தியோகஸ்தர்களுக்கு தவணை தவறாது செலுத்த வேண்டிய தலைவரி போன்ற லஞ்சங்கட்டணங்களும் ஜில்லாபோர்டுகளின் சீரியான நிர்வாகத்தின் சிறப்பை நன்கு விளக்கும். தகுந்தகாரண காரியங்களின்றி ஜில்லாபோர்டு நிர்வாக அதிகாரிகளின் குரோத, லோப, மத, மாச்சரியங்களை திருப்தி செய்து கொள்வதற்காக ஆசிரியர்களை தூரம் தொலையான இடங்களுக்கு மாறுதல்கள் செய்து துன்புறுத்தி இருப்பது இந்த நிர்வாகத்திறமைக்கு ஒரு விசேஷ சான்றாகும்.

மேற்கூறிய காரணங்களால், ஆரம்பக் கல்வியின் பொருட்டு செலவிடப்படுகின்ற பெருந்தொகை, தாலூகா போர்டுகள் இருந்தகாலத்தில் உதவிய அற்ப பிரயோஜனத்தையும் கூட இப்போது உள்ள ஜில்லாபோர்டுகள் உதவமுடியாத நிலைமையில் சக்தியை இழந்திருக்கிறது என்பதை எவரேனும் மறுத்துரைக்க இயலுமா? ரஸ்தாக்கள் அமைத்தல், சுகாதார விஷயங்கள் போன்ற இதரகாரியங்களிலும் தாலூகாப் போர்டுகளால் கவனிக்கப்பட்டு வந்த அளவுக்கு மிகவும் குறைவாகவே ஜில்லாபோர்டுகள்கவனித்துவருவதாய்ப் பொது ஜனங்கள் உணர்வதை ஆக்ஷேபிக்க முடியுமா?

ஸ்தலஸ்தாபனங்களின் நிர்வாகத்தை செவ்வனே திருத்தி அமைக்கவும், ஆரம்பக் கல்வியை சரிவர திருப்திகரமான முறையில் கண்காணித்து சீர்திருத்தம் செய்வதற்காகவும், ஜில்லாபோர்டுகள் லாயக்கான டிவிஷன்களாக இருக்கக் கூடுமென்ற பூரணநம்பிக்கையுடன் தாலூகாப் போர்டுகள் சர்க்காரால் கலைக்கப்பட்டன. சொற்ப அனுபவத்திலேயே ஜில்லாப் போர்டுகளின் அட்டூழியங்களையும், நிர்வாக ஊழல்களையும், காணவும் கேட்கவும் எவரும் மனம் சகிக்கப் பெறாதநிலையில் ஜில்லாபோர்டுகளின் பிரிவினை வேண்டாமென்று சிலர் கூறுவது அறியாமையேயாகும். பிரிவினை இரண்டு போர்டுகளல்ல நான்கு அல்லது குறைந்த பக்ஷம் மூன்று போர்டுகளாகவோ பிரிக்கப்படுதல் இனியாவது ஒழுங்கான நிர்வாகத்திற்கு சாதகமாக இருக்கும். எல்லா ஜில்லா போர்டு அங்கத்தினர்களும் சர்க்காரும் பொருத்தமான முறையில் பிரிவினையை ஏற்படுத்த முன்வருவார்களாக.

---

### அமராவதிபுதூர் இளைஞர் ஊழியர் சங்கம்

(ஒரு நிருபர்)

இச்சங்கத்தின் வாராந்தக் கூட்டம் ஆவணிமாதம் 10-ந் தேதி செவ்வாய்க்கிழமை மாலை 6-45-க்கு திருவாளர் லெ. ராம. லெட்சுமணன் தலைமையில் ஆரம்பமாயிற்று. "காலத்தின் பெருமை" என்ற விஷயத்தைப்பற்றி திருவாளர்கள் சுப. காசியப்பன், ராம. சுப்பிரமணியன், முரு. நாராயணன், [illegible] ஆனிமுத்து, தி. நாராயணன், [illegible] வெங்கடாசலம் முதலியோர்கள் பேசினர். வந்தன வாழ்த்துடன் கூட்டம் இரவு 8-மணிக்குக் கலைந்தது.

## கிட்டா செட்டியார்கள் சங்கம்

(அலோர் ஸ்டார்)

தாது ஆண்டு ஆடித்திங்கள் 26-ம் நாள் (9-7-36) வியாழக்கிழமை மாலை 4-30 மணிக்கு கிட்டா சமஸ்தான நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்தின் மூன்ருவது ஆண்டு நிறைவுவிழாப் பொதுக்கூட்டம் அதற்கென அதிவிமரிசையாக அலங்கரிக்கப் பெற்றிருந்த சங்கக் கட்டிடத்தில் கூடியது.

கூட்டத்திற்கு உள்ளூர் அங்கத்தினர்களும், கூலிம், சுங்கப்பட்டாணி, ஜித்திரா, ஈயான் முதலிய வெளியூர் அங்கத்தினர்களும், ஏனைய அபிமானிகளுமாக 70 அன்பர்கள் விஜயம் செய்திருந்தனர். சிறுவர்களால் இறை வணக்கமாக இனிய கீதங்கள் பாடப்பெற்ற பின் சஙகத்தலைவர், திருவாளர் சா. ராம. சிதம்பரம் செட்டியாரவர்கள் தலைமையில் கூட்டம் ஆரம்பிக்கப் பெற்றது.

காரியதரிசி திருவாளர் உ. ராம. மெ. சு. செ. சு. வினைதீர்த்தான் செட்டியாரவர்கள் பினங்கு, ஈப்போ, கோலாலம்பூர், கிள்ளான், சிரம்பான், பத்துபாகாட், சிங்கப்பூர் முதலிய சமூக சகோதர சங்கங்களால் அனுப்பப்பெற்ற வாழ்த்துக் கடிதங்களை வாசித்த பிறகு அறிக்கையில் அடங்கிய அங்கத்தினர் ஜாபிதா, நிர்வாகசபை நடவடிக்கைகள், நம் சங்கம் ஆற்றிய தொண்டுகள், வரவு செலவு கணக்குகள், முடிவுரை முதலியவற்றை வாசிக்க சபையோரால் ஏகமனதாய் அங்கீகரிக்கப் பெற்றது.

புது வருடத்திற்கு (நான்காம் வருடத்திற்கு) கீழ்க்கண்ட உத்தியோகஸ்தர்களும் நிர்வாக சபை அங்கத்தினர்களும் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப் பெற்ருர்கள்.

தலைவர்:—திருவாளர் உ. தெ. உ. சாமிநாதன் செட்டியார்,

உபதலைவர்:—திரு. வீ. அ. அருணசலம் செட்டியார்.

காரியதரிசி:— சா. லெ. நா. மாணிக்கம் செட்டியார்.

உதவிக் காரியதரிசிகள்.—சு. மு. மு. சுப்பிரமணியன் செட்டியார், சு. சா. சோமசுந்தரம் செட்டியார்.

பொக்கிஷதார்:—ஆரு. பழ. சி. பழ காசிநாதன் செட்டியார்.

நிர்வாகசபை அங்கத்தினர்கள்:—க. அழ. ராம. சுப்பிரமணியன் செட்டியார். ராம. சித. ராமசாமி செட்டியார், சா. ராம. சிதம்பரம் செட்டியார், ஆரு. பழ. சி ப. சுப்பிரமணியன் செட்டியார், செ. சி. நா. சி. நாகப்ப செட்டியார், சு. செ. சேவு. சுப்பிரமணியன் செட்டியார், சொ. சித. சிதம்பரம் செட்டியார், சோம. சா. மெய்யப்ப செட்டியார், பி. நா. பி. ராம. சோமசுந்தரம் செட்டியார், யெ. மு மு. பழ. முத்துக்கருப்பன் செட்டியார், சா. நா. ராம. சு. சுப்பிரமணியன் யெட்டியார், சு. சித. முத்தப்ப செட்டியார், லெ. வெ. வெள்ளையன் செட்டியார், பின்னர் மாஜித் தலைவர் திருவாளர் சா. ராம. சிதம்பரஞ் செட்டியார் தமது முடிவுரையாகப் பேசிய பின்பு, மாஜித் தலைவர் அவர்களுக்கும், புதுத் தலைவர் திருவாளர். உ. தெ. உ. சாமிநாதன் செட்டியாரவர்களுக்கும் அழகிய மலர் மாலைகள் அணிவிக்கப்பெற்றதும் புது ஆண்டுத் தலைவர் தமது தலைமைப் பதவியேற்று சொற்பொழிவாற்றினர்கள்.

உதவிக் காரியதரிசி திருவாளர் சு. மு. மு. சுப்பிரமணியன் செட்டியாரவர்களால் தலைவரவர்களுக்கும் விஜயம் செய்திருந்த உள்ளூர், வெளியூர் அங்கத்தினர்களுக்கும் அபிமானிகளுக்கும் வந்தனோபசாரம் கூற இரவு 7-30 மணிக்கு கூட்டம் இனிது நிறைவேறியது.



# ஜப்பானை எதிர்க்க சீனாவின் முஸ்தீபு

## 10 மைல் விஸ்தீரணத்தில் யுத்த வசதிகள்

### ஜப்பான் சீனத்தின் விரோதியே

ஒஸாக்கா மெய்னிச்சியின் கீழ்க்கோடி நிபுணரான மிஸ்டர். பன்ரோக்கு யோஷியோகா என்பவர் "ஜப்பான் சீனத்தின் விரோதியே" என்று கூறி மேலும் கூறியிருப்பது வருமாறு:—

"இரண்டாண்டுகள் கழிந்த பின்னர், நான் நாங்கிங் சென்று பார்த்தேன். ஒரு பெரிய காரியத்தைச் சாதித்து முடிப்பதற்காக வேண்டி, சீன சர்க்கார் மிகப் பிரமாதமான வேலைகளையெல்லாம் செய்துகொண்டு வந்திருக்கிறதென்றும், இப்போது அதற்கான விஷயங்களெல்லாம் நல்ல முறையில் அமைக்கப் பட்டு இருக்கின்றனவென்றும் கண்டு கொண்டேன். என்றைக்காவது ஒரு நாள் ஜப்பானுடன் சீனா போர் புரிந்துதான் ஆகவேண்டுமென்பதை அறிந்த ஜெனரல் சியாங்கைஷேக் உள்நாட்டு, வெளி நாட்டுத் தொந்தரைகளெல்லாம் ஒன்றும் இல்லாதபடி சரி செய்துகொண்டு சீனர்களனைவரையும் ஒரே கட்டுப்பாட்டில் கொண்டுவருவதற்காகப் பெரு முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிருர். ஜப்பானைச் சீனா தன் எதிரியாக இப்போதுதான் உருவகப் படுத்தி வைத்துக் கொண்டிருக்கிறது.

"நாங்கிங்கைச் சுற்றி 10-மைல் விஸ்தீரணத்திற்குள் 40 லக்ஷம் பவுன் செலவில், பிரமாதமான கோட்டைகளைச் சீனா கட்டி வைத்திருக்கிறது. லோயர் யாங்ட்ஸீ நதிக் கரையிலும் அதற்கடுத்துக் கடற்கரையிலும், மஞ்சளாற்றின் தென் கரையிலும் சீனா பலத்த கோட்டைகளைக் கட்டியிருக்கிறது. அதனுடன் யுத்தத்துக்குச் சீனா தயாராவதாக ஒரு வதந்தி நாங்கிங்கைச் சுற்றி பரப்பப்பட்டிருக்கிறது. இவற்றையெல்லாம் பார்க்கையில் ஜெனரல் சியாங்கைஷேக் ஜப்பானுடன் யுத்தம் செய்யத் தீர்மானித்து விட்டிருக்கிருர் என்பது புலனாகிறதன்ருே?

### ஜப்பான் நல்ல முறையில் நடந்து கொள்ள வேண்டும்

பிரபல சீனக்கல்வி நிபுணர் டாக்டர் ஹியூஷிஹ் என்பவர் பின் வருமாறு கூறுகிருர்:—

ஜப்பான் தான் சீனாவை விட வலிமை மிகுந்த தேசமாகையால் முதலில் ஜப்பான் தேசம்தான் நல்ல காரியங்களைச் செய்ய ஆரம்பிக்க வேண்டும். சீனர்களுக்கு ஜப்பான் மீது நல்லெண்ணம் தோன்ற வேண்டுமாயின், குறைந்த பக்ஷமாக, சீன மதிற் சுவர்களுக்கு அப்பாலாவது ஜப்பானியர்கள் போய் விட வேண்டும். அப்போதுதான் ஜப்பானின் நல்ல எண்ணத்தில் சீனர்களுக்கு நம்பிக்கை ஏற்படும். சினர்களுடன் சிநேகிதம், கூட்டுறவு என்ற வீண் பேச்சுக்களை யெல்லாம் ஜப்பான் பேசிக் கொண்டிருப்பதில் பயனில்லை. அத்தகைய பேச்சுக்களை நிறுத்திவிட வேண்டும். இப்போது ஜப்பானைப்பற்றிச் சீனர்கள் மனத்தில் இருப்பதெல்லாம் வெறும் துவேஷமும் சந்தேகமும் தான். முதலில் அத்தகைய எண்ணங்கள் சீனர்களுள்ளத்தில் வளராதபடி செய்து பின்னர் அவற்றை அடியுடன் நீக்கிவிட ஜப்பானியர்கள் முயலவேண்டும். சீனாவுக்கும் ஜப்பானுக்கு மிடை நல்லுறவு ஏற்படுத்த ஜப்பான் விரும்புவதாய் இதுவரை தெரியவில்லை. எனவே, முதலில் ஜப்பான் நற்காரியத்திற்கு வித்தான்றும் என்றும் பிறகு நாங்களும் அதன் மீது நல்ல பிப்பிராயம் கொண்டு விடலாம் என்றும் கருதுகிருேம்."

### ஜப்பானியர் மஞ்சூக்கோவில் குடியேறுவர்

மஞ்சூக்கோவில் ஜப்பானியர் குடியேறுவது பற்றி இருபது வருஷத் திட்டமொன்று தையாரிக்கப்பட்டிருக்கிறது. இதை நிறைவேற்றி வைக்க 12 கோடி பவுன் செலவாகும். அடுத்த 20 வருஷ காலத்தில் 10 லக்ஷம் ஜப்பானியக் குடும்பங்கள் அதாவது 50 லக்ஷம் ஜப்பானியரை மஞ்சூக்கோவில் குடியேறச் செய்வதே இத்திட்டத்தின் நோக்கம். இதற்காகும் செலவில் 5 கோடி பவுன் மட்டும் ஜப்பானிய ஸர்க்கார் கொடுக்குமெனத் தெரிகிறது, பாக்கிப் பணம் எங்கிருந்து வரப்போகிறதெனத் தெரிவிக்கப்பட மில்லை.

முதல் வருஷத்திற்கு, அதாவது 1937-38-ம் வருஷத்திய வரவு செலவுத் திட்டத்தில் இதற்காக 5 லக்ஷம் பவுன் ஒதுக்கி வைக்கப்படும். இதைக் கொண்டு, 50,000 பேர் மஞ்சூக்கோவில் குடியேற உதவி செய்யப்படும். இக்குடியேற்றம் ஸங்கியாங், பிங்கியாங் ஆகிய மாகாணங்களில் நடைபெறு மென்றும், அங்குள்ள 24,70,000 ஏகரா விஸ்தீரண முள்ள பூமி குடியேற்றத்திற்கு உகந்தது தானாவென மஞ்சூக்கோ சர்க்கார் ஆராய்ந்து வருவதாகவும் தெரிகிறது.

# செட்டியார் செக் மோசடி வழக்கு

## போலீஸ் கோர்ட்டில் சந்தேகப் பேர்வழி

கொழும்பு ஆகஸ்டு 20உ

கிருஷ்ணன் செட்டியாருக்கு ரூ. 7000 கொடுக்கும்படி குறிப்பிட்டு கொழும்பு நாடார் வங்கி மானேஜரால் கையொப்பமிட்டு திருநெல்வேலி வங்கிக்கு பிறப்பிக்கப்பட்ட செக்கு மோசடி சம்பந்தமாக நேற்று கொழும்பு போலீஸ் நீதிபதி முன்னிலையில் புறக்கோட்டை 5-ம் குறுக்குத் தெருவிலிருக்கும் சுப்பிரமணியம் பிள்ளை என்பவரை துணை போலீஸ் சூப்ரெண்ட் திரு. வி. வி. குணரத்ன, கோர்ட்டில் ஆஜர் செய்து அவருடைய அறிக்கையை தாக்கல் செய்யும்படி நீதிபதியை வேண்டினர்.

மேற்படி சுப்பிரமணியம் பிள்ளை எதிரி கூண்டில் ஏறியதும் நீதிபதி "நீர், இப்பொழுது இந்த கோர்ட்டில் இருக்கிறீர். உமக்குச் சொல்லவேண்டிய விஷயங்களை போலீஸ் நீதிபதிக்கு அறிக்கை செய்ய உமக்கு விருப்பமா?" என்று கேட்டார். அதற்கு அவர் "எனக்கு விருப்பமில்லை" என்று பதிலளித்தார்.

நீதிபதி நான் சம்பந்தப்பட்ட வரையில் இங்கே காரியம் முடிந்தது.

பின்னர் திரு. குணரத்ன கூறியதாவது:—

கொழும்பிலுள்ள நாடார் பாங்கியிலிருந்து ஒருவர் ரூ. 21-க்கு ஏ. சுப்பிரமணியம் செட்டியாரின் பேரில் தென்னிந்தியா வங்கிக்கு ஒரு செக் வாங்கியிருந்தார். "21" என்ற இலக்கமும், வார்த்தைகளும் சில திராவகத்தினல் நீக்கப்பட்டு அதற்குப் பதிலாக ரூ. 7000 என்று எழுதப்பட்டது. பிரஸ்தாப செக்கு தென்னிந்தியா வங்கியில் கொடுக்கப்பட்டு மாற்றப்பட்டது.

மற்றும் திரு. குணரத்ன நீதிபதியிடம் கூறியதாவது:—

ஷை சந்தேகப் பேர்வழி நேற்று கைது செய்யப்பட்டார். சென்னைப்பட்டினத்து போலீஸ்இன்ஸ்பெக்டர்களுள்ஒருவர் நேற்று இது சம்பந்தமாக இங்குவந்து சேர்ந்தார். அவருடைய உதவியினல்தான் பேர்வழி கைது செய்யப்பட்டார். திருநெல்வேலிக்குச் சென்று அவர் இதுபற்றிய ரிக்கார்டுகளைக் கொண்டு வரவேண்டி யிருக்கிறது.

போலீஸ் அதிகாரிகள் உத்தியோக தோரணைச் செய்தியிலிருந்து இதுபற்றி மற்றும் இரண்டு பேர்வழிகள் திருநெல்வேலியில் கைதுசெய்யப்பட்டிருப்பதாகவும் தெரிகிறது

பின்னர் திரு குணரத்ன எதிரியை செப்டம்பர் மாதம் முதல்தேதி வரை ரிமாண்டில் வைக்கும்படி வேண்டினர்.

நீதிபதி எதிரிக்கு ரூ 5000 ஜாமீனில் விடுதலைசெய்ய உத்தரவளித்து விசாரணையை செப்டம்பர் மாதம் முதல் தேதி வரை ஒத்திவைத்தார்.

## வேலூர் ஜில்லா போர்டு எலக்ஷன்

### இந்திராணி அம்மாள் அபேட்சகர்

திருப்பத்தூர், ஆக. 21

செப்டம்பரில் நடைபெறும் ஜில்லா போர்டு எலக்ஷனில் திருப்பத்தூர் தாலூகா ஜோலார்பேட்டை பிர்க்காவுக்கு ராணிப்பேட்டை இந்திராணி பாலசுப்பிரமணியம் அம்மையார், ஒரு அபேட்சகராக, நிற்பதாக தெரியவருகிறது. அன்னவருக்கு இங்கு எக்கட்சியிலும் போட்டியில்லை. என பல முக்கியஸ்தர்களால் திடமாகத் தெரியவருகிறது.









# காங்கிரஸ் தேர்தல் அறிக்கை

## பதவியேற்கும் பிரச்னை தேர்தலுக்குப் பின்பே

## "ஐக்கிய சர்க்காரைத் தடுக்க முயல்வோம்"

## சட்ட சபைகளில் செய்யப் போவதென்ன?

பம்பாய், ஆக, 21—

பல திருத்தங்கள் செய்தபிறகு காங்கிரஸ் காரியகமிட்டி தேர்தல் அறிக்கையை அங்கீகரித்தது. அந்த அறிக்கையை உடனே பிரசுரித்தனர்.

அந்த அறிக்கை வருமாறு:— 50 வருஷங்களுக்கு மேலாக இந்திய தேசிய காங்கிரஸ் மகாசபையானது இந்தியாவின் சுதந்திரத்திற்காகப் பாடுபட்டு வருகிறது. இந்த ஸ்தாபனத்தின் பலம் அதிகரிக்க அதிகரிக்க இந்த மகாசபை இந்திய மக்களின் தேசீய உணர்ச்சியையும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழிக்க வேண்டுமென்ற அவர்களது விருப்பத்தையும் வற்புறுத்தத் தலைப்பட்டது முதலும் இந்திய திதசிய காங்கிரஸ் இந்நாட்டில் ஆட்சிபுரிவோரிடம் போராட வேண்டியதாயிற்று. கடந்த 16 வருஷகாலமாக காங்கிரஸ் மகாசபை தேசசுதந்திரத்திற்காக மகத்தான இயக்கங்களை நடத்தியது. அந்த போராட்டமானது இந்தியா சுதந்தரமும் பூரண சுயேச்சையும் அடையும் வரையில் நடைபெற்றே தீரவேண்டும்.

### பூரணசுயேச்சையே அரு மருந்து.

இந்த ஆண்டுகளில் இந்தியாவிலும் உலகத்திலும் பொருளாதார நெருக்கடி ஏற்பட்டது. ஆனல் நம்நாட்டிலுள்ள சகல மக்களின் நிலைமையும் மோசமானது. இன்று பாமர ஜனங்கள் வறுமையாலும் ஆதரவற்றும், மிக்க கஷ்டப்பட்டுக்கொண்டிருக்கின்றனர். இந்த வறுமைப் பிணியை உடனே நிவர்த்திசெய்ய வேண்டும். நீண்ட காலமாக நம் நாட்டு விவசாய மக்களும் தொழிலாளர்களும் வறுமையாலும் வேலையின்மையாலும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்கின்றனர். இன்று இதர ஜனங்களையும் அதாவது சிறு வர்த்தகங்களையும், நடுத்தரஸ்திதியிலுள்ளவர்கள் இவர்களை தரித்திரமும் வேலையில்லாத் திண்டாட்டமும் பீடித்துள்ளன. நமது பொருளாதார பிரச்னைகளையும் சமூகபிரச்னைகளையும் தீர்க்கவும் பாமர ஜனங்கள் சுரண்டப் படுவதை நிறுத்தவும் பூரண சுயேச்சை மட்டுமே நமக்கு அதிகாரத்தை அளிக்கும். ஆகவே பூரண சுயேச்சையானது கோடிக் கணக்கான தேசமக்களுக்கு உடனே நிறைவேறவேண்டிய லட்சியமாக விருக்கிறது.

தேசீய இயக்கம் பலமடையவும் பொருளாதார நெருக்கடி ஏற்படவும் அதிகார வர்க்கத்தினர் இந்திய மக்களை அடக்குமுறையால் கஷ்டப்படுத்தி பிரஜாசுதந்திரத்திற்கு பங்கம் விளைவித்தனர். பிரிட்டிஷ் சர்க்கார் இந்தியாவில் ஏகாதிபத்ய ஆதிக்கத்தைப் பலப்படுத்தும் பொருட்டும் இந்தியமக்களை மேலும் சுரண்டும் பொருட்டும் புதிய அரசியல் திட்டத்தை நிறைவேற்றி யுள்ளனர்.

### உலக யுத்தம்

சர்வதேசத் துறையில் நெருக்கடிகள் ஏற்பட்டவண்ண மிருக்கின்றன. உலக யுத்தம் ஏற்படும் போலவு மிருக்கிறது. லக்ஷ்மணபுரி காங்கிரஸானது இந்தியாவிலும் உலகத்திலும் ஏற்பட்டுள்ள நெருக்கடியான நிலைமையைத் தேசமக்களுக்குக் குறிப்பிட்டு ஏகாதிபத்ய யுத்தத்தில் இந்தியா கலந்து கொள்ளக் கூடாதென்றும் இந்தியாவின் பூரணசுயேச்சைக்காக, விடாமல் போராடி வரவேண்டுமென்றும் வற்புறுத்தியது.

### புதிய அரசியல் நிராகரிப்பு

காங்கிரஸ் மகாசபையானது புதிய அரசியல் திட்டத்தை முற்றிலும் நிராகரித்து விட்டது. எந்த அரசியல் திட்டமும், இந் நாட்டின் பூரண சுயேச்சையை அடிப்படையாகக் கொண்டதாகவிருக்க வேண்டும். அத்தகைய திட்டத்தை மகா ஜனங்களின் பிரதிநிதிகள் அடங்கிய சபையாலேயே நிச்சயிக்கக்கூடும்.

தேச மக்களின் பலத்தை அதிகப்படுத்த வேண்டுமென்பதையும் ஜனங்களின் கோரிக்கையை நிறைவேற்றத்தக்க சாதனங்களைக் கையாள வேண்டுமென்பதையும் காங்கிரஸ் மகாசபை எப்பொழுதும் வற்புறுத்தி வந்துள்ளது. அந்த லட்சியத்திற்காக காங்கிரஸானது சட்டசபைகளுக்கு வெளியே நடவடிக்கைகளை மேற்கொண்டு வந்துள்ளது. பாமர ஜனங்களைக் கட்டுப்படுத்துவதாலும், அவர்களுக்குச் சேவை புரிவதாலுமே உண்மையான பலம் ஏற்படுமென்பது காங்கிரஸின் அபிப்பிராயமாகும்.

### சட்டசபைப் பிரவேச காரணம்

இந்த லட்சியத்தையும், நோக்கத்தையும் அநுசரித்தும் ஆனல் தற்போதுள்ள நிலைமையை முன்னிட்டும் அன்னியர் ஆதிக்கத்தைப் பலப்படுத்த வல்லவர்களது நடவடிக்கைகளைத் தடுக்கும் பொருட்டும் காங்கிரஸ் மகாசபையானது மாகாணசட்டசபைத் தேர்தல்களில் சட்டசபை ஸ்தானங்களைக் கைப்பற்றத் தீர்மானித்துள்ளது. ஆனல் புதிய அரசியலின் கீழ் ஏற்படும் சட்டசபைகளுக்குக் காங்கிரஸ் வாதிகளை அனுப்புவது அந்த அரசியல் திட்ட அமுல் சம்பந்தமாக ஒத்துழைப்பதற்கல்ல. அரசியலை எதிர்த்து ஒழிப்பதற்காகவே ஆகும். புதிய அரசியல் நிராகரிப்புக் கொள்கையை சாத்தியமான வரையில் நிறைவேற்றுவதற்காகவேயாகும். இந்தியாவில் தனது ஆதிக்கத்தை மேன்மேலும் பலப்படுத்தவும், இந்திய மக்களைச் சுரண்டவும் முயலும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை யெதிர்த்துப் போராடவேண்டுமென்பதும் காரணமாகும். சுதந்திரத்திற்கு அவசியமான சாதனங்களின் வளர்ச்சிக்கும், ஜனங்களைப் பலப்படுத்துவதற்கும் சாதகமாகவே சட்டசபைகளில் காங்கிரஸ் வேலை நடக்கவேண்டும்.

### சட்டசபைகளால் அநுகூலமில்லை

புதிய சட்டசபைகள் பிரிட்டிஷார் முதலிய ஆதிக்கக் கோஷ்டியினரது பாதுகாப்புக்காக பாதுகாப்புக்களையும் விசேஷ அதிகாரங்களையும் உடையனவாகும். ஆகவே அச்சபைகளால் போதிய அனுகூலங்கள் பெறமுடியாது. வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் ஆகியமுக்கிய பிரச்னைகளையும்அவைகளால்தீர்க்கமுடியாது.

### காங்கிரஸ் பிரதிநிதிகள்

இந்திய மக்களைக் கஷ்டப்படுத்துவதும், அவர்களது சுதந்திரத்திற்குத் தடையாக விருப்பதுமான பல ரெகுலேஷன்களையும், அவசர சட்டங்களையும் சமாப்தியாக்க காங்கிரஸ் பிரதிநிதிகள் வேலை செய்வார்கள்; பிரிட்டிஷ் ஏகாதிபத்ய முயற்சிகளையும் எதிர்ப்பார்கள். காங்கிரஸ் பிரதிநிதிகள், பிரஜா சுதந்திரத்தை நிலைநாட்டவும், அரசியல் கைதிகள், ஆள்தூக்கிச் சட்டக் கைதிகள் இவர்களது விடுதலைக்காகவும், தேசிய போராட்டத்தின் போது விவசாயிகளுக்கும் பொது ஸ்தாபனங்களுக்கும் ஏற்பட்ட நஷ்டங்களுக்கு ஈடு செய்யவும் பாடுபடுவார்கள்.

இந்த சட்டசபைகளால் பூரண சுயேச்சை பெறமுடியாதென்பதையும், வறுமை, வேலையில்லாத் திண்டாட்டம் இந்த பிரச்னைகளை சரிவர தீர்க்க முடியாதென்பதையும் காங்கிரஸ் மகாசபை நன்கு உணருகிறது. காங்கிரசின் லட்சியம் என்னவென்பதையும். அதிகாரம் ஏற்பட்டபோதெல்லாம் என்ன சாதிக்க முயலுமென்பதையும் இந்திய மக்கள் தெரிந்து கொள்ளும் பொருட்டே காங்கிரஸ் மகா சபையானது தனது பொதுவேலைத் திட்டத்தை சமர்ப்பிக்கிறது.

### கராச்சி தீர்மானம்

1931-ம் வருஷம் கராச்சி காங்கிரசில் மூலாதார உரிமைகள் தீர்மானத்தில் காங்கிரஸ் பொதுலட்சியமானது நிச்சயிக்கப்பெற்றது. அந்த பொது லட்சியமானது இன்னும் மாறவில்லை. கடந்த 5 வருஷ காலமாக நெருக்கடிகள் அதிகரித்துள்ளபடியால் தரித்திரம், வேலையில்லாத் திண்டாட்டம் முதலிய பொருளாதார பிரச்னைகளை மேலும் ஆலோசனை செய்யவேண்டுவது அவசியமாகிவிட்டது. இந்நோக்கத்துடன் லட்சுமணபுரி காங்கிரஸ் இந்நாட்டில் மிகவும் முக்கியமானதும், அவசரமானதுமான பிரச்னை கொடிய வறுமையும், வேலையில்லாத் திண்டாட்டமும், விவசாயிகளின் கடன் சுமையுமாகு மென்பதையும் அக்கஷ்டத்திற்குக் காரணம் புராதீனமான நிலவரி முறையும், விலை விகிதம் குறைந்ததுமாகு மென்பதையும் வற்புறுத்துவதோடு விவசாயிகள் க்ஷேமாபி விருத்திக்காக முழுத்திட்டமொன்றைத் தயாரிக்கும்படி மாகாண காங்கிரஸ் கமிட்டிகளுக்கு கட்டளை யிட்டது. மாகாண கமிட்டிகளின் சார்பில் இந்திய காங்கிரஸ் கமிட்டி விவசாயிகள் க்ஷேமாபி விருத்திக்குரிய வேலைத்திட்ட மொன்றைத் தயாரித்து அதனை வெளியிடும்.

### நிலவரி முறை சீர்திருத்தம்

பூரணதிட்ட மொன்றை நிச்சயிக்கும்முன்னதாக காங்கிரஸ் மகாசபையானது கராச்சியில் தீர்மானித்ததையே மீண்டும் ஊர்ஜிதம் செய்திறது, விவசாயிகளுக்கும் குடியானவர்களுக்கும் நிவாரணமும் அநுகூலமும் ஏற்படுமாறு நிலவரி, குத்தகை முறைகளைச் சீர்திருத்துமென்பதே கராச்சி காங்கிரசில் வற்புறுத்தியதாகும்.

### கடன் நிவாரணம்.

கடன்பட்டவர்களது கஷ்டபரிகாரத்தை கவனிக்க வேண்டுவது உடனே செய்ய வேண்டியவேலையாகும். சர்க்கார் குறைந்த வட்டி விகிதத்தில் கடன் உதவி செய்வது பற்றியும் கடன் சுமையைக் குறைப்பதுபற்றியும் விசாரணை நடத்தவேண்டும். விவசாயிகள், குடியானவர்கள், சிறு நிலச்சுவான்தார்கள் சிறு வியாபாரிகள் இவர்களுக்கு நிவாரணம் கிடைக்கவேண்டும்.

தொழிலாளர்களைப் பொறுத்த வரையில் நாட்டின் பொருளாதார நிலைக்கு ஏற்றபடி அவர்களுக்கு திருப்திகரமான சம்பளமும், குறைந்த வேலை நேரமும் நல்ல ஸ்திதியும் ஏற்படும்படி செய்வதும்; தொழிலாளர்-முதலாளிகள் சச்சரவைத் தீர்க்கத் தகுந்த ஏற்பாடும், விருத்தாப்பியர் நோயாளிகள் வேலையற்ருேர் இவர்களுக்குப் பாதுகாப்பும் தங்களது உரிமைகளைப் பாதுகாக்க சங்கம் ஏற்படுத்தவும், வேலை நிறுத்தம் செய்யவும் உரிமை ஏற்படும்படி செய்வதும் காங்கிரஸின் கொள்கையாகும்.

### பெண்கள் உரிமை

பொது வாழ்க்கையில் சட்டரீதியாகவோ அல்லது சமூக சம்பந்தமாகவோ பெண்களுக்குள்ள தடைகளை அகற்றுவதற்காகவும், காங்கிரஸ் மகாசபை பாடுபடும். பெண் தொழிலாளருக்குப் பிரசவ வசதிகளும் பாதுகாப்பும் அளிக்க வேண்டுமென்பதையும் காங்கிரஸ் ஆதரித்துள்ளது. இந்தியப் பெண்கள் சுதந்திரப் போராட்டத்திலே ஈடுபட்டு, அருஞ் சேவை புரிந்துள்ளனர். சுதந்திர இந்தியாவில் பெண்களுக்கும் பிரஜா உரிமைகளில் சமத்தவமுண்டென்று காங்கிரஸ் உறுதி கூறுகிறது.

### ஆதி ஹிந்துக்கள் முன்னேற்றம்.

தீண்டாமை விலக்கு பற்றியும், ஆதி இந்துக்களும் பிற்போக்கான சமூகத்தாரும் சமுதாய பொருளாதாரத் துறைகளில் முன்னேற்றமடைய வேண்டுமென்பது பற்றியும் காங்கிரஸ் மிக்க சிரத்தை கொண்டு வருவது பிரசித்தியானவிஷயமாகும். அவர்கள் பிரஜா உரிமைகள் சம்பந்தப்பட்டவரையில் இதர சமூகத்தாருடன் சமத்துவம் பெற்றிருக்க வேண்டுமென்பதே காங்கிரஸ்நோக்கமாகும்.

கத்தர் அபிவிருத்தியும், கிராம கைத்தொழி லபிவிருத்தியும் நீண்ட காலமாக காங்கிரசின் வேலைத்திட்டமாக விருந்து வருகிறது. பெரிய தொழில்களைப்பொறுத்த வரையிலும் பாதுகாப்பு அவசியம். ஆனல் தொழிலாளர்,மூலச்சரக்குகள் உற்பத்திசெய்வோர் இவர்களது உரிமைகளைப் பாதுகாக்க வேண்டும். கிராம கைத்தொழில்களின் நலத்தையும் நன்கு கவனிக்கவேண்டும்.

இந்தியாவில் அரசியல் கைதிகளை நடத்தும் முறைஅவதூறனதாக விருக்கிறது. அரசியல் கைதிகளை நன்ருக நடத்தும்படிசெய்ய சகல பிரயாசைகளும் மேற்கொள்வார்கள்.

### சமூகத் தீர்ப்பு

சமூகத் தீர்ப்பானது புதிய அரசியலின் ஒரு பாகமாகும். அத்தீர்ப்பு சம்பந்தமாக

(12-ம் பக்கம் பார்க்க)

## மலாய்நாட்டு சந்தாதார்கட்கு.

மலாய் நாட்டிலுள்ள சந்தாதார்கள் தங்கள் சந்தாத் தொகையை ஈப்போ அரு. ராம. வி. சொக்கலிங்கம் செட்டியாரவர்களிடம் செலுத்தும்படி வேண்டுகிறோம்.

மானேஜர், "குமரன்"
காரைக்குடி

குமரன்

காரைக்குடி
தாது-ஹூ ஆவணிமீ 12உ

## நம்பிக்கைக்கு வழியென்ன?

திருச்சி நிகழ்ச்சி காங்கிரஸ்காரருக்குள் பெருத்த குழப்பத்தையும் கவலையையும் உண்டாக்கியிருக்கிறது. திரு. ராஜகோபாலாச்சாரியார் மிகுந்த திறமைசாலி. கூர்மையான புத்தியுடையவர். இந்த ஆயுதங்களைக் கொண்டும் தியாக உணர்ச்சியைக் கொண்டும் தலைமை ஸ்தானத்தை அடைந்தார். அவருடைய உழைப்பு காங்கிரசுக்கு மிகுந்த ஆக்கத்தை உண்டுபண்ணியதென்பதை மறுக்க முடியாது. அதற்கேற்ப மிகுந்த கௌரவத்துக்கு உரியவரானார். ஆனால் வகுப்புவாதம் கூடாதென்று கடுமையான பிரசாரம் செய்துகொண்டே சிறந்த வகுப்பு வாதியாக விளங்கி வந்ததைப்பிறர்கண்டுபிடிக்கமுடியாதிருந்தது. இது வெளிப்படாதிருந்ததற்குக் காரணம் இரண்டு. ஒன்று உள்ளே இருந்த பலர் கட்டுப்பாடாக ஒருவரையொருவர் காட்டிக்கொடுக்க இடமேற்படாமல் நடந்து கொண்டது; மற்றொன்று உள்ளேயிருந்தவர்கள் அவர்களை உண்மையான தலைவர்களென்று பக்தி பூர்வமாக நம்பியது. இவற்றால் காங்கிரஸில் கலவரமின்றி யிருந்துவந்தது. பதவி பெறும் நிலைமையில்லாததால் எல்லாருமே பொதுவாக தியாகவழியில் மனத்தைச் செலவிட வேண்டியவர்களாக இருந்தனர். காங்கிரஸினிடம் ஜனங்கள் காட்டிய அநுதாபத்தை ஆதாரமாக்கி அதிகாரத்துறையில் தலையிட ஆசைப்பட்டதும் குழப்பத்துக்கிடமேற்பட்டு விட்டது. என்ன செய்யலாம். ஜஸ்டிஸ் கட்சியார் ஏகபோகமாகப் பல பதவிகளை அனுபவிக்கின்றனர். தங்கட்கு செல்வாக்கு மேம்பட்டு வரும்போது அப்பதவிகளை யேற்பது சுலபமென்று கருதாமல் எப்படி முடியும்? பதவி பெறுவதென்ற உத்தேசமில்லாத வரையில் எல்லாரும் தியாக வழியில் செல்லுதல் சுலபமாக இருந்தது. தியாகத்தில் ஒருவருக்கொருவர் போட்டியிட்டனர். பதவியில் மோகமேற்பட்டால் அதையடையப் பலர் விரும்புதல் இயற்கையன்றோ? காங்கிரஸுக்கு இருக்கும் செல்வாக்கைக்கண்டு பலர் சேர்ந்துகொள்ள ஆரம்பித்தனர். அவர்களைச் சேர்த்துக்கொள்ளுதல் தங்கள் கட்சிக்குப் பலமாகுமென்று காங்கிரஸ் தலைவர்களும் கருதி யேற்றுக்கொண்டனர்.

இந்த நிலைமை யேற்பட்டதும் கஷ்டம் அதிகரித்தது. ஆங்காங்கே குழப்பங்கள் ஏற்பட்டன. காரைக்குடியில் நடைபெற்ற மாகாணமகாநாட்டில் ராஜகோபாலாச்சாரியாரின் அடிப்படையான கருத்து வெளிப்பட்டது. சத்தியமூர்த்தியைத் தலைவராக்கப் பட்டபாடு ராஜகோபாலாச்சாரியார் ஒரு சரியான வகுப்பு உணர்ச்சி கொண்டவரென்ற கருத்தைத் தெரியப் படுத்தியதில் ஆச்சரியமென்ன? காங்கிரஸ் வாதிகளில் நேர்மையுள்ள பலர் அவரைத் தாக்கினர். திருச்சி நிலைமை இன்னும் வெட்ட வெளிச்சமாக்கி விட்டது. டாக்டர் ராஜன், டாக்டர் சாஸ்திரி போன்ற பலருள்ள ஊரில் தேவர் ஆதிக்கம்பெற விடமுடியுமா? இந்தக் காலத்தில் ஆச்சாரியார் பிரிந்து கொண்டார். தற்போது ஏற்பட்டிருக்கிற பழியைத் தேவருக்குத் தலைமை நல்குவதால் தீர்த்துக் கொள்ளலா மென்று கருதிய ஆசாரியாரின் சாணக்யம் மிகப் பெரிதாகும். அவ்வளவு தூரம் விட்டுக்கொடுக்க டாக்டர் ராஜன் வகையார் சம்மதிக்கவில்லை. இனி மறைந்து நின்று காரியம் சாதிப்பது முடியாது. தவிர உள்நாட்டுக் கலவரம் வெளிப்பட்ட பிறகு திர்க்கமாக ஒன்றும் செய்ய முடியாதல்லவா?

இயற்கையாகவே தமிழ்நாட்டில் உள்ள ஜாதி உணர்ச்சியும் சமய உணர்ச்சியும் மனிதனை மனிதத் தன்மையிலிருந்து வெகுதூரம் கொண்டுபோய் விட்டன. உயர்ஜாதியாரும் படிப்பாளிகளும் சகல உரிமைகளையும் அடைந்துவருகின்றனர். பொதுவாக நம் நாட்டிலிருக்கும் இந்த விஷயமானது முடிவு செய்யப்படும்வரை வகுப்பு வாதமானது ஒன்றையும் உருப்பட விடாதென்பது அனுபவத்திற் கண்டுவரும் உண்மையாகும். பிராமணர் அதிகாரத்தில் மதம் அரசியல் முதலிய பல துறைகளிலும் ஆதிக்கம் பெற்றிருப்பதில் அருவருப்படைந்து மற்றவருக்கும் பங்குகிடைக்க வேண்டுமென்ற அடிப்படையில்தான் ஜஸ்டிஸ் கட்சி காலூன்றி நிற்கிறது. காங்கிரஸ் எவ்வளவு பலங்கொண்டெதிர்த்தாலும் ஜஸ்டிஸ் கட்சியின் அடிப்படை தகர்ந்தால்தான் காங்கிரஸ் எதிர்ப்பு நிற்கும். ஜஸ்டிஸ் கட்சியின் வேலை ஒருவாறு பலன்பட்டு பிராமணரைப் பின்பற்றிச்சிலர் அதிகாரம் பெற்றுவருகிற நிலைமையில் அதற்கடுத்து ஆழ்ந்து கிடக்கும் ஆதித்திராவிடர் கட்சி தோன்றி விட்டது கவனிக்கத்தக்கது. இந்த நிலைமையை சூழ்ச்சியினாலும் பலத்தினாலும் சாஸ்திரத்தினாலும் சமாளிக்க முடியாது.

இதற்குப் பரிகாரம் இரண்டுவிதத்தில் ஏற்படலாம். ஒன்று ஜஸ்டிஸ் கட்சியார் விரும்புகிறபடி ஜாதிவாரியாக விடவேண்டும். இது புதிதல்ல. மகமதியருக்கும் கிறிஸ்தவருக்கும் ஆங்கிலேயருக்கும் ஆதித் திராவிடருக்கும் வகை செய்வது போல ஹிந்துக்களுக்குள்ளும் ஒரு ஏற்பாடு செய்துகொள்ளுதல் வேண்டும். ஆனால் இதனால் மேலுமேலும் வகுப்புணர்ச்சி வளருமேயன்றிக் குறையாதென்பது உண்மையானால் உயர் ஜாதியினர் தியாக புத்தியுடன் பதவிகளையும் அதிகாரத்தையும் விட்டு விலகி மற்றவருக்கு இடமளிக்க வேண்டும். இது உயர்ந்த குணமாகும். இப்படியே மனப்பூர்வமாக விட்டுக்கொடுக்க முன் வாராமல் தன் ஜாதியார்க்கு உரிமையும் ஆதிக்கமும் இருக்கவேண்டுமென்று அந்தரங்கத்தில் எண்ணிக் கொண்டு சூழ்ச்சி செய்வதில் மேலுமேலுங் குழப்பமே ஏற்படுவதன்றி ஒற்றுமைக்கு இடமேற்படக்கூடுமா? வகுப்புணர்ச்சி கெட்டதென்று அதிகாரத்தை தன் பக்கம் வைத்திருப்பவர் கூறுவதற்குப் பொருளேது.

காங்கிரஸில் இதுவரையும் இந்நிலைமையிருந்து வருவதால்தான் பல தலைவர்கள் வெளியேற வேண்டியதாயிற்று. எதிர்க் கட்சிகள் பலப்படவும் இடமாயிற்று. முந்திய தலைவர்கள் எப்படி இதற்குள்ளிருந்துநேர்மையைக் கொள்ள முடியவில்லை யென்று வெளியேறினார்களோ அப்படியே இன்று ராஜகோபாலாச்சாரியாரும் வெளியேறினார். ஆனால் ஜாதிநலங் கருதுகிறார்களென்று முந்தியபலர் சென்றனர். இன்று சுயநலங் கருதுகின்றனரென்று கருதும் நிலைமை வந்திருக்கிறது.

## உள்ளூர்ச் செய்தி

காலநிலை:—வெய்யில் மிகக் கடுமையாக இருக்கிறது. மழை இல்லை.

## பெஞ்சுக்கோர்ட் வைஸ் பிரஸிடெண்ட்

காரைக்குடி பெஞ்சுக் கோர்ட்டின் வைஸ் பிரஸிடெண்டாக திருவாளர். செ. ராம. பழ. நாராயணன் செட்டியாரவர்கள் நியமிக்கப் பெற்றிருக்கிறார்கள். இவர்களுடைய நியமனம் மிகவும் பொருத்த முடையதாகும். பெஞ்சுக் கோர்ட்டில் செய்யப்படும் நியமனங்கள் பல சந்தர்ப்பத்தில் பல மாதிரி நிகழ்வதுண்டு. மொட்டை மனு எழுதி எதற்கும் தொல்லை செய்பவர் மலிந்துள்ள இப் பகுதியில் திரு நாராயணன் செட்டியாரவர்களைத் தெரிந்து அரசாங்கத்தார் நியமித்திருப்பது மகிழ்ச்சிக்குரியதாகும்.

## அடுத்த காங்கிரஸ் தலைவர் யார்?

பம்பாய் 21

திரு. சி. ராஜகோபாலாச்சாரியார் தனது பதவிகளை ராஜிநாமா செய்துவிட்டபோதிலும் நாலணா காங்கிரஸ் அங்கத்தினராக இருப்பார். புதிய காங்கிரஸ் விதிகளின்படி ஒரு சாதாரண காங்கிரஸ் அங்கத்தினர் காங்கிரஸ் அக்கிராசனர் ஸ்தானத்திற்கு தேர்ந்தெடுக்கப்படலாம். அப்படிச்செய்தால் அவருடைய தலைமையை மறுபடியும் பெற ஒரு சந்தர்ப்பம் கிடைக்கு மென்று இங்குள்ள அரசியல் வாதிகள் நம்புகின்றனர்.

## திருச்சி ஜில்லா பிரிவினை.

ஆகஸ்டு 23-ந்தேதி நடைபெற்ற திருச்சி ஜில்லா போர்டு மீட்டிங்கில் ஷை ஜில்லாவை வடதிருச்சி தென் திருச்சி என்று இரண்டாகப் பிரிக்க வேண்டும் என்றொரு தீர்மானம் திரு. செங்கமலம் பிள்ளையால் பிரேபிக்கப்பட்டு மீனம்பள்ளி ஜமீந்தாரால் ஆமோதிக்கப்பட்டது. திரு. ஏ. விஸ்வநாதய்யர் (காங்கிரஸ்) எதிர்த்தார். எதிர்ப்பை திரு. சாமிநாத சாஸ்திரியார் ஆதரித்தார். ஓட்டுக்கு விடப்பட்டதில் சாதகமாகவும், பாதகமாகவும் கிடைத்தன. தலைவர் ரத்னவேலுத் தேவர் தமது ஓட்டை பிரிக்கவேண்டாமென்ற காங்கிரஸ் கட்சிக்குக் கொடுத்தார். தீர்மானம் தோற்றது.

கல்விச்சபைப் பிரதிநிதி ஸ்தானத்திற்கு மீனம்பள்ளி ஜமீன்தாருக்கு 21 ஓட்டுகளும் காங்கிரஸ் சார்பான ஆர். சீனிவாசய்யங்காருக்கு 22 ஓட்டுகளும் கிடைத்தன.

## எட்வர்டு மன்னர் விவாகம்

மாட்சிமை தங்கிய எட்வர்ட் மன்னரவர்கள் மாஜி கெய்சரின் பேத்தியும் ஜர்மானியின் மாஜி இளவரசரின் குமாரியுமான 19 வயதுள்ள அழகிய ஸெஸில் விக்டோரியா இளவரசியை மணந்துகொள்ளப்போவதாக ஜர்மனியில் வதந்தியுலவுகிறதென்று "சண்டே ரிபரி" என்ற பத்திரிகை கூறுகிறது.

## இராயவரம்

### விவேகானந்தா வாசகசாலை

(ஒரு நிருபர்)

ஆகஸ்டு 23உ

மாதாந்தரக்கூட்டம் வாசகசாலைக் கட்டிடத்தில் மாலை 4-45 மணிக்கு காரைக்குடி கணேசன் அவர்கள் தலைமையில் ஆரம்பமாகியது. கூட்டத்திற்கு சுமார் 100 ஜனங்கள் விஜயஞ் செய்திருந்தனர். தலைவர் முன்னுரை கூறிய பின்னர், வாசகசாலையும் அதன் உபயோகமும் எனும் பொருள் பற்றி ஷை பள்ளிக்கூட மாணவனும், ஹிந்தி கற்றுக்கொள்ள வேண்டியதின் அவசியம் பற்றி ஆர். ஸ்ரீநிவாசன் அவர்களாலும், தமிழரும்—தமிழும் வீன்பது பற்றி கே. கும்பலிங்கம் அவர்களாலும், செட்டியார்களும்—சிக்கனமும் எனும் விஷயங் குறித்து கு. முத்தையா அவர்களாலும் மிக அழகாகப் பேசப்பெற்றன. தலைவர் முடிவுரை கூறினர். காரியதரிசியால் வந்தனங்கூறக் கூட்டம் 7 மணிக்கு இனிது கலைந்தது.

## ஸ்ரீமான் ராமசாமி செட்டியார்

இவ்வூர் ஸ்ரீமான். ராம. சா. ராம. ராமசாமி செட்டியாரவர்கள் ஆடி-மீ 31உ இரவு 9-45-க்குத் திடீரென்று காலஞ் சென்றார்கள். வயது 70 என்றாலும் நல்ல உறுதியான உடல் நலத்துடனிருந்தார்கள். மாற்றூர் தேவஸ்தானத்தின் கமிட்டி மெம்பர்களில் ஒருவராக இருந்து வந்தார்கள். புதுக்கோட்டை—தஞ்சாவூர் ரோட்டில் ஒரு தண்ணீர்ப் பந்தல் தருமம் செய்திருக்கிறார்கள். திருமலை ராயபுரமென்ற ஊரில் ஒரு சிவன் கோயில் கட்டியிருக்கிறார்கள். அவர்கள் குமாரர் திருவாளர். சாத்தப்ப செட்டியாரவர்கட்கு நமது அனுதாபத்தைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

## பாகனேரி கிராம முன்னேற்ற சங்கம்.

(ஒரு நிருபர்)

வீழனேரி, ஆகஸ்டு, 23—

இன்று மாலை 5 மணிக்கு கிராம முன்னேற்ற சங்க பிரசாரக் கமிட்டியார் இவ்வூருக்கு விஜயம் செய்தார்கள். இவ்வூர் விவசாயத் தலைவர் சுப. பெரி. அளகர்சாமி தேவர் அவர்கள் தலைமையில் ஓர் கூட்டம் நடைபெற்றது. G. வெங்கிட்டராமய்யரவர்கள், எஸ் காளிதாஸ் அவர்கள், சங்கத்தலைவர் சித. கண்ணப்பன் அவர்கள், டி. என். மீனாக்ஷிசுந்தரம் அவர்கள் முறையே கிராம முன்னேற்றம், விவசாயம், சுகாதாரம், கள்குடி, என்பதுபற்றி மிக விரிவாகவும் அழகாகவும் சொற்பொழி வாற்றினார்கள். அக்கூட்டத்திற்கு ஆண்களும் பெண்களுமாக 300 பேர்கள் வரை வந்திருந்தனர். இப்பிரசாரக் கமிட்டியாருக்கு வேண்டிய உதவிகளைச் செய்து கமிட்டியாருடன் கலந்து ஒத்துழைத்த ஸ்ரீமான் சுப. பெரி. பெரியண அம்பலம் அவர்களுக்கும் மு. க. தனிவீர பாண்டியன் அவர்களுக்கும், எஸ். பால்ராம்சே அவர்களுக்கும் வந்திருந்தோ ரனைவருக்கும் க. கி. இராமநாதனவர்களால் வந்தனோபசாரம் கூறப்பெற்று கூட்டம் இனிது கலைந்தது.

## கதாகாலட்சேபம்

நா. புதூர் திரு. அ. மெ. மெ. கருப்பஞ் செட்டியார் குமாரன் மெய்யப்பன் திருமணத்தை முன்னிட்டு ஆவணி 16உ திங்கள்கிழமை மாலை 4-30 மணிக்கு ஒ. சிறுவயலில் ஸ்ரீரங்கம் சடகோபாச்சாரியார் அவர்களால் நந்தனார் கதா காலட்சேபம் நடத்தப்பெறும்.

## சட்டசபை கலைக்கப்பட்டது

புதுக்கோட்டை சட்டசபையை ஆகஸ்டு மாதம் 19உ கலைத்துவிட்டனர். ஓட்டர் தொகையில் 1300 பேர்கள் புதிதாகச் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். அக்டோபர் 5உ யை தேர்தல் தேதியாகக் குறிப்பிட்டிருக்கிறார்கள். பூர்த்திச் செய்யப்படவேண்டியது. 35 ஸ்தானங்கள். சர்க்கார் 15 மெம்பர்களை நியமனம் செய்வார்கள்.

## பேராவில் தென்னைப் பயிர்

பேராவில் தென்னை பயிரிடும் பிரதேசம். 109264 ஏகரா நிலங்களாகும். அதில் எஸ்டேட்டுத் தென்னைகள் 49,464 ஏக்ரா. 100 ஏக்ராவுக்குக் குறைந்தபிரதேசங்கள் 39,800. 59,800 ஏக்ரா பிரதேசங்களில் தனித்தனியாகப் பயிரிடப்படும் தென்னைகளும் சேர்ந்திருக்கின்றன. சில்லரை மிராசுகளாக இருந்து வரும் பெரிய பிரதேசம் லோயர் பேராவில் டகாடைத்தேர் என்ற டெல்டா பிரதேசந்தான். அவ்விடத்தில் 32,000ஏகரா கொண்ட சில்லரை மிராசுகள் இருக்கின்றன. சென்ற வருஷம் வியாபாரிகளுக்குள் போட்டியிருந்து வந்ததால் சில்லரை மிராசுகளின் கொப்ரா விலை ஏறியிருந்தது.

மட்டமான கொப்ரா உற்பத்தி செய்வது தேங்காய் விற்பனையைக் காட்டிலும் லாபகரமாயிருந்தது. ஆனால், எஸ்டேட் ரகம் உற்செய்வது கட்டு படியாகவில்லை. ஆனால், அந்தப் பிரச்னை கவனிக்கப்பட்டு வருகிறதென்று பேராவிலுள்ள பிரிட்டிஷ் ரெஸிடெண்டு கூறுகிறார்.



## செட்டிநாடு குமாரராஜா

சென்னை, ஆக. 22—

செட்டிநாட்டு குமாரராஜா ஸ்ரீ. எம். ஏ. முத்தையா செட்டியார் ரங்கூனிலிருந்து "எதியோபியா" கப்பலில் திங்கட்கிழமையன்று சென்னை வந்துசேர்ந்தார்கள்.

## ரப்பருக்குப் பெருந் தேவை

உலக ரப்பர் உபயோகம் விடாது அதிகரித்து வருகிறது. ரப்பருக்கு ஒரு பெருந் தேவையிருக்கிறது.

## நடுவிக்கோட்டை

### ஜவஹர் கால் பந்தாட்டக் கிளப்

(ஒரு நிருபர்)

தாது ஆவணி 9ம் நாள் திங்கட்கிழமை மாலை 4 மணிக்கு தேசியவாலிபர் சங்கத்தின் ஆதரவில் ஜவஹர் கால்பந்தாட்டக் கிளப் என்னும் ஓர் விளையாட்டு நிலையம் ஸ்ரீமான் தொ. காளியப்பனம்பலம் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது அவ்வமயம் காரியதரிசி வே. சுப்பய்யா பிள்ளையவர்கள் அவ்விடத்தில் தேசியக்கொடி ஒன்றும் ஏற்றி வைத்து தேசப்பயிற்சி என்னும் விஷயம் பற்றிச் சிறிது நேரம் சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். பின்னர் வந்திருந்த ஜனங்களுக்கு சந்தனம் தாம்பூலம் சிற்றுண்டி வழங்கப்பட்டது.

## செட்டியார் கடை கணக்கப்பிள்ளை

### கொல்லப்பட்டார்

11—8—36உ இரவில் பக்கோக்கூவில் லேவாதேவித் தொழில் செய்து வருகிற ஆர். எம். எம். செட்டியார் கடை கணக்கப்பிள்ளை சமயலிங்கம் என்பவர் கத்தியால் குத்தப்பட்டுக் கொல்லப்பட்டார்.

கடையிலிருந்து 5000 பெறுமானமுள்ள ஈடு நகைகள் களவாடப்பட்டிருக்கின்றன.

## கள்ளத்தனமாக சாராயம் வைத்திருந்ததாக

(நமது நிருபர்)

தேவகோட்டை ஆக 26உ

அரண்மனை சிறுவயல் முத்துக்குமாரு பிள்ளை, முத்துசாமி சேர்வை, கருப்பையாபிள்ளை ஆகியவர்கள் சென்ற 23-8-36உ ஒரு வண்டியில் 4 கியாலன் சாராயத்தைக் கள்ளத்தனமாக லைசன்சில்லாமல் எடுத்துச் சென்றதாக ஷை மூவரும் தேவகோட்டைக் கடுத்த உதயாச்சிக் கருகில் எக்சைஸ் சப் இன்ஸ்பெக்டரால் கைதுசெய்யப்பட்டு தேவகோட்டை போலீசாரிடம் ஒப்படைக்கப்பட்டனர். தேவகோட்டை போலீசார் எதிரிகள் பேரில் கள்ளச்சாராயம் வைத்திருந்ததாக வழக்குப் பதிவு செய்துகொண்டு எதிரிகளை ஜாமீனில் விடுதலை செய்திருக்கின்றனர்.

## தேவகோட்டை

(ஒரு நிருபர்)

இளைஞர் சங்கம்:—இச் சங்கத்தில் 23—8—36உ மாலை 5மணிக்கு மாதம் இருமுறை கூடும் கூட்டம் ஒன்று திரு. கரு. கு. மாணிக்கம் அவர்கள் தலைமையில் ஆரம்பமாயிற்று. அவ்வமயம் திருவாளர்களான. ராம. நாராயணன், ராதாகிருஷ்ணன், நா. நடேசன் ஆகியவர்கள் முறையே கடவுள் வழிபாடு, சுதந்தரம், செட்டியார்களின் நிலை என்பனபற்றிப் பேசியதும் தலைவர் அவர்கள் முடிவுரை கூற காரியதரிசியால் வந்தனங் கூறப்பட்டு இரவு 7-30 மணிக்குக் கூட்டம் இனிது கலைந்தது.

## வெளியிடப்படாத கட்டுரைகள்

"விதவை மங்களம்". இது இருபுறமும் இடமின்றி எழுதப்பட்டிருக்கிறது. பிழைமயம்.

## கட்டுரை எழுதுவோர்

குமரனுக்குக்கட்டுரைகள்எழுதுவோர் எழுத்துக்களைத் தெளிவாக எழுத வேண்டும். காகிதத்தின் இருபுறமும் எழுதியனுப்புதல் கூடாது. கூடியமட்டும் எழுத்துப்பிழைகள் இல்லாதிருத்தல் வேண்டும். கூட்டெழுத்துக்களை விலக்குதல் நன்று பத்திராதிபர்.

## பர்மா நகரத்தார்கள் கவனிக்க

பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார்கள் சங்க உபகாரியதரிசி திரு. அழ வீர. பெ. லெட்சுமணன் செட்டியாரவர்கள் அறிவிப்பதாவது:—

இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் இடையே நெடுங்காலமாக இருந்துவந்த தொடர்பானது இனிக் கத்தரிக்கப்பட்டு விடப் போகிறது. பர்மா பிரிவினை நெருங்கிவிட்டது. பிரிக்கப்பட்ட பர்மாவில செட்டியார்கள் நிலை கவலைக்கிடமாக ஆகலாம். சென்ற சமீபகாலமாக பர்மாவின் பற்பல பாகங்களிலும் செட்டியார்களுக்கு விரோதமாக துவேஷப் பிரசாரங்கள் செய்யப்பட்டு வருகின்றன. செட்டியார்கள் பர்மா நாட்டிற்குச் செய்துள்ள சேவை சர்க்கார் முதற்கொண்டு சாதுக்கள் ஈறாகவுள்ள யாவராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பினும் நகரத்தார்களின் நலங்களைப் பாதிக்கும் முறையில் தற்காலம் பர்மாவில் பிரசாரங்கள் செய்யப்பட்டு வருவது செய்ந்நன்றி கொன்ற செயலேயாகும்.

ஆகவே பர்மா நகரத்தார்கள் ஏகோபித்து ஒன்று சேர்ந்து தங்கள் உரிமைகளைக் காத்துக் கொள்ள ஆவனவற்றை ஆலசியமின்றி ஆக்கத்துடன் ஆற்றுதற்கு அடிகோலுதல் வேண்டும்.

தாது ஆவணி 21உ (5-9-36) சனிக்கிழமை பர்மா நாட்டுக்கோட்டைச் செட்டியார் சங்கத்தின் 13வது வருடப் பொதுக் கூட்டம் நடைபெற விருக்கிறது. பர்மாவின் எல்லாப் பாகங்களிலும் எல்லா ஊர்களிலும் உள்ள நகரத்தார்கள் யாவரும் ஷை கூட்டத்திற்குக் கட்டாயம் வந்து அங்கு ஆலோசிக்க விருக்கும் பல முக்கிய விஷயங்களில் தவறாது கலந்துகொள்ள வேண்டுகிறேன்.

## நடுவிக்கோட்டை

(ஒரு நிருபர்)

தேசிய வாலியர் சங்கத்தினாதரவில் 23—8—36 ஞாயிற்றுக்கிழமை மாலை 5-மணிக்கு ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. தொ. அடைக்கலன் சேர்வையவர்கள் தலைமை வகித்தார்கள். திரு. சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் தமது ராஜீநாமாவை வாபஸ் பெற முடியாதென்று பிடிவாதம் செய்வதற்கு வருந்தியும், டாக்டர் ராஜன் செய்கையைக் கண்டித்தும். சுபாஷ் சந்திர போஸை விசாரணையின்றிச் சிறைச் சாலையில் வைத்திருப்பதைக் கண்டித்தும், எல்லைப்புற காந்திக்கு பாஞ்சாலம், எல்லைப்புறம் முதலிய இடங்கள் செல்ல தடை விதித்திருப்பதைக் கண்டித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## ஜவஹர்லாலுக்கு அழைப்பு

தாது ஹூ ஆடிமீ 26உ யன்று கண்டிரமாணிக்கம் பொதுஜன முன்னேற்ற சங்கத்தில் ஓர் நிர்வாகக் கமிட்டிக் கூட்டம் நடைபெற்றது. உபதலைவர் திரு. வீர. முத்தளகுபிள்ளை தலைமைவகித்தார். பொக்கிஷதார் ஆனிமாதக் கணக்குகளை வாசித்தார். பண்டித ஜவகர்லால் நேரு அவர்கள் செப்டம்பரில் தமிழ்நாட்டுக்கு விஜயஞ் செய்வதால் இச்சங்கத்தின் மூலம் முன்னதாகவே காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தலைவர் வழியாக அழைப்பு அனுப்புவதென்றும், எல்லோரும் காங்கிரஸ் அங்கத்தினர்களாகச் சேரவேண்டிய தவசிய மென்றும் ஆதித்திராவிடர் சேரியில் தண்ணீர் வசதி குறைவாக இருப்பதால் வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டு மென்றும் தீர்மானிக்கப் பெற்றது.

## பரிசளிப்பு

தேவகோட்டை இளைஞர் சங்கத்தின் சார்பாக டவுன் கோம் சிங்கிள்ஸ் டோனமெண்ட் நடைபெற்றது. நாற்பது டீம்கள் கலந்துகொண்டன. பரிசளிப்பதற்காக காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் கமிட்டி காரியதரிசி திரு. மு. காசிநாதன் அவர்கள் தலைமையில் கூட்டம் நடைபெற்றது. வெற்றி பெற்ற திரு. ஆர். ஸ்ரீநிவாசகோபாலன் அவர்களுக்கு வெள்ளிக்கப்பும் கூடிவிளையாடிய (ரன்னர்) திரு. கே. ஆர். எஸ். முத்து அவர்களுக்கு வெள்ளிப்பதக்கமும் தலைவரால் பாராட்டிப்பேசி பரிசளிக்கப்பட்டது.

## தேவகோட்டை

### கோவாபரேட்டிவ் பாங்கு மகாசபைக் கூட்டம்

### டைரெக்டர்கள் தேர்தல்

(நமது நிருபர்)

தேவகோட்டை, ஆகஸ்டு 25

26—8—36 தேதி தேவகோட்டை கோவாப்ரேட்டிவ் அர்ப்பன் பாங் மகாசபைக் கூட்டம் காலை 9 மணிக்கு பாங் கட்டிடத்தில் பாங் தலைவர் எம். ஆர். சிவராம கிருஷ்ண அய்யர் தலைமையில் ஆரம்பிக்கப் பெற்றது. நிகழ்ச்சிகள்ஆரம்பத்தில் ஸ்ரீமான் டி. வி. கிருஷ்ண அய்யங்கார் சென்றமாதம் மகாச்சபைக் கூட்டத்தில் நிறைவேறாத தீர்மானத்தை முதலில் எடுத்துக் கொண்டு அதன் பின் மற்ற நிகழ்ச்சிகளை ஆரம்பிக்க வேணுமென்று கூறவே ஷை தீர்மானங்கள் எடுத்துக் கொள்ளப்பட்டன ஸ்ரீமான் டி. வி. கிருஷ்ண அய்யங்கார் காரியதரிசிக்குக் கொடுக்கப்படும் கௌரவ சம்பளம் விஷயமாக விஸ்தாரமாக எடுத்துப்பேசி வருகிற தேர்தலில் பழைய டைரக்டர்கள் அட்டைபோல் ஒட்டிக்கொண்டிருக்காமல் பலபேர்களும் பாங்கியில் கலந்து கொள்ள சந்தர்ப்பமளிக்கப்பட வேண்டுமென்று சொன்னார். தலைவர் உடனே அதைமறுத்து ஆர்டர் ஒழுங்கு எச்சரித்தார். உடனே பல மெம்பர்களும் பலவாறு சப்தம் போடவே சிறிது குழப்பமேற்பட்டது. வார்த்தைகள் விதண்டாவாதமாகவும் பேசப்பட்டது. அதன்பின் தலைவர் ஆர்டர் ஆர்டர் என்று கூறி கூட்டத்தை சமாதானப்படுத்தினர். ஸ்ரீமான் டி. வி. கிருஷ்ண அய்யங்கார் கொண்டுவந்த தீர்மானத்தைப்பெரு மிதமான மெம்பர்கள் ஆமோதித்தனர்.

அதன் பின் ஸ்ரீமான் எஸ். எல். பாரதியார் இரண்டு தீர்மானங்கள் கொண்டு வந்தார். 1. டைரெக்டர்கள் தேர்ந்தெடுப்பதற்கு டயம் குறிப்பிடுவது. 2. ஓட்டான பிறகு பாலட் பேப்பர்களை கவரில்போட்டு முத்திரை வைப்பது. இதை யாவரும் ஏகோபித்து ஆமோதித்தனர். ஸ்ரீமான் டி. வி. கிருஷ்ண அய்யங்கார் தீர்மானத்தை சீனிவாச அய்யர் ஆட்சேபித்துப் பேச ஆரம்பித்தார். உடனே சப்பன் தமிழில் பேசச்சொன்னார்.

தலைவர் டைரெக்டர்கள் தேர்தலுக்கு ஓட்டுச்செய்யும் பொழுது பாலட் பேப்பர்களின் பின்பக்கம் கௌரவச் சம்பளம் வேண்டும் வேண்டாமென்றும் எழுதச்சொன்னார். புதிய வருஷத்திற்கு டைரெக்டர்களாக 22 பேர்கள் நின்றார்கள். அதில் 9 பேர்கள் டைரெக்டர்களாக தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள். அவர்களில் ஹைஸ்கூல் ஆசிரியர் வாஞ்சி அய்யர்தான் புதியவர். மற்ற 8 பேர்களும் பழம் டைரெக்டர்களே.

### புதியவருட டைரெக்டர்கள்.

1. ஆர். சங்கரம் பிள்ளை, 2. எம். ஆர். சிவராம கிருஷ்ண அய்யர், 3. பீ. எஸ். கிருஷ்ணசாமி அய்யர், 4. எம். ஆர். சிவராம அய்யர், 5. எஸ். சுப்பிரமணிய அய்யர், 6. கே. வாஞ்சி அய்யர், 7. எஸ். ஜெகநாத அய்யங்கார், 8. கே. வரத அய்யங்கார், 9. எம். நாகசாமி அய்யர், மேற்கண்டவர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டதாக தலைவர் தெரிவித்தவுடன் ராம. அருணாசலம் செட்டியார் மெம்பர்கள் வந்த கணக்குப் புஸ்தகத்தில் 120 என்றுஇருக்க ஓட்டுச் செய்திருக்கிறது 220க்கு மேல் இருப்பதினால் தாங்கள் மினிட்ஸ் புக்கில் கையெழுத்துப் போடும்படி சொன்னார்.

அதற்கு தலைவர் பின்னுடிவந்த கணக்கு தனிக்காயிதத்தில் வந்திருப்பதாக பதில் சொன்னார். அதை ஸ்ரீமான் ராம. அருணாசலம் ஆட்சேபித்தார். இத்துடன் கூட்டம் கலைந்தது. தேர்தல் சரியில்லை என்பதையொட்டி வழக்கு ஏற்படலாமெனத் தெரிகிறது.

## முஸ்லீம் வீட்டில் தீ விபத்து

(நமது நிருபர்)

தேவகோட்டை ஆகஸ்டு 26—

சென்ற 24-8-36 பகல் சுமார் 1 மணிக்கு கீழச்சாலை தெருவிலுள்ள ஒரு முஸ்லீம் வீட்டில் நெருப்புப்பற்றி ஷை வீட்டிலிருந்து பக்கத்து இரண்டு வீடுகளுக்கு நெருப்புப் பரவி ஷை வீடுகள் எரிந்துவிட்டன. தெருமக்கள் கூட்டமாக வந்து மிக்க பிரயாசையுடன் நெருப்பையணைத்து அதிகம் சேதம் வாராமல் தடுத்துவிட்டனர்.

## தந்திச் செய்தி

### சிங்கப்பூர் மார்க்கெட்

சிங்கப்பூர், ஆகஸ்டு 24உ

ரப்பர் பீக்கல் முப்பத்தைந்து வெள்ளி முப்பத்து மூன்று காசு

### இரங்கூன் மார்க்கெட்

(நமது நிருபர் தந்தி)

ரெங்கூன், ஆகஸ்டு 26

| | |
|---|---|
| படகு நெல் | 93—95 |
| ரயில் நெல் | 93-96 |
| நசெப்ன் சின்னமில் | 234, 235 |
| நசெப்ன் எஸ்பியூ | 242-8 |
| மீடோன் பஜார் | 232-8 233-8 |
| மீடோன் எஸ்பியூ | 242-8 |
| ரெடி புழுங்கலரிசி / மார்க்கெட் லாங் | 260, 270 |
| மில்சார் | 242-8, 250 |
| புல்பாயிலடு | 235, 242-8 |
| பாதாலே | 280, 290 |
| வெள்ளை பீன்ஸ் | 170 |
| சிவப்பு பீன்ஸ் | 150 155 |
| பட்டர் பீன்ஸ் | 167-8 |
| க்ரௌண்ட் பீன்ஸ் | 150, 152-8 |
| உளுந்து | 162-8 172-8 |
| கோதுமை | 225 |
| தினை | 160 |
| சோளம் | Nil |
| எள்ளு | 375—395 |
| பருத்திவிதை | 4-12/5 |

### சென்னை மார்க்கெட்

சென்னை ஆகஸ்டு 25

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத்தங்கம் | 34 | 1 | 9 |
| ஷை வாயிதா | 34 | 3 | 9 |
| மூலா தோலா 1-க்கு | 33 | 11 | 9 |
| சவான் மொத்தம் | 21 | 15 | 3 |
| ஷை சில்லறை | 21 | 15 | 6 |
| வெள்ளி 100 ரூ. எடை | 49 | 4 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 3 |

### கொழும்பு மார்க்கெட்

(நமது நிருபர்)

கொழும்பு ஆகஸ்டு 24

| | |
|---|---|
| ரப்பர் கிரேப் ராத்தல் | 40½ |
| " ஷீட் " | 40 |
| ரப்பர் கூப்பன் ராத்தல் | 30½ |
| தேயிலை கூப்பன் ராத்தல் | 46½ |
| கொப்பரா பாரம் | 46-50 |
| தேங்காய் எண்ணெ | |
| F. O. B. வெள்ளை டன் | 287—50 |
| ஷை சாதா | 286—25 |
| பிரிஸ்டல் தும்பு நம்பர் 1 அந்தர் | 4-10 |
| மெட்ராஸ், நம்பர் 1-அந்தர் | 1—75 |
| தேங்காய்ப்பூ ராத்தல் 1க்கு | 10 |

### லண்டன் மார்க்கெட்

ரப்பர் விலை

ஆகஸ்டு 24உ ராத்தல் 7½ பென்ஸ்

## கப்பல் செய்திகள்

### நாகபட்டினத்திற்கும் பினாங்குக்கும்

(ஏஜண்டினிடமிருந்து)

### புறப்படுதல்

கப்பல்கள் நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்குப் புறப்படும் விபரம் வருமாறு:—

| | |
|---|---|
| ரோனா | 29—8—36 |
| ரஜூலா | 12—9—36 |

### வருதல்

கப்பல்கள், மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு வரும் தேதி வருமாறு:—

| | |
|---|---|
| ரஜூலா | 3—9—36 |
| ரோனா | 17—9—36 |

### பி. அண்டு ஓ மெயில்கள்

கொழும்பிலிருந்து மலாய் நாட்டுக்கு புறப்படும் கப்பல்களும் தேதியும்:—

| | | |
|---|---|---|
| ராவல்பிண்டி | 17000 டன், | 6-9-36 |
| கோர்பு | 15000 டன், | 20-9-36 |

(French Mail)

சைகோனுக்கு புதுச்சேரியிலிருந்து கப்பல் புறப்படும் தேதி:—

எஸ்.எஸ். ஆண்ட்ரிபோன் 9—9—36

## ரயில்வே வண்டிப் போக்கு வரவு

### காரைக்குடியிலிருந்து திருச்சிக்கு

| வண்டிகளின் விவாம். | வரும் நோம் காலை | புறப் நேரம் காலை |
|---|---|---|
| நிர். 25. பாசஞ்சர் | 6-52 | 6-58 |
| நிர். 43. பாசஞ்சர் | .... | 8-15 |
| நிர். 1. இந்தோ-சிலோன் எக்ஸ்பிரஸ் | 10-10 | 10-16 |
| | மாலை | மாலை |
| நிர். 67. பாசஞ்சர் | 1-6 | .... |
| நிர். 33. ,, | .... | 2-7 |
| நிர். 29. ,, | 3-56 | 4-15 |
| | இரவு | இரவு |
| நிர். 31. பாசஞ்சர் | 7-58 | 8-14 |
| நிர். 7. தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 12-26 | 12-34 |

### காரைக்குடியிலிருந்து மானமதுரைக்கு

| வண்டிகள் விபரம். | வரும் நேரம் காலை | புறப் நேரம் காலை |
|---|---|---|
| நிர். 32. பாசஞ்சர். | .... | 6-55 |
| நிர். 44. ,, | 7-52 | .... |
| நிர். 68. ,, | 10-2 | 10-12 |
| நிர். 34. ,, | 12-5 | .... |
| | மாலை | மாலை |
| நிர். 30. பாசஞ்சர் | 1-59 | 2-5 |
| நிர். 2. இண்டோ சிலோன் எக்ஸ்பிரஸ் | 4-3 | 4-10 |
| | இரவு | இரவு |
| நிர். 26. பாசஞ்சர் | 8-2 | 8-8 |
| தனுஷ்கோடி பாஸ்ட் பாசஞ்சர் | 1-25 | 1-31 |

## நோட்டீஸ்

சிவகெங்கை

### டி. மு. கோர்ட்டு

1935ஹூ O. S. நம்பர் 251

பிருன்மலை தேவஸ்தானம் ஷை தேவஸ்தானம் டிரஸ்ட்டி ஸ்ரீமத் தெய்வசிகாமணி பொன்னம்பல தேசிகரவர்கள் மூலமாய். } வாதி.

பிருன்மலை பாப்பாபட்டி யிலிருக்கும் 7 மன்மத அப்தல்லா ஷையூர் சைய்யது அப்தல்லா 8 } 7-8 பிரதிவாதிகள்.

ஷை நிம்பர் பிரதிவாதிகள் வாதி தேவஸ்தானத்துக்கு பாத்யமான பிருன்மலை பாப்பாபட்டி கிருமத்திலுள்ள மலைவகையரு இடங்களில் இருந்த மரங்களை அக்கிரமமாய் வெட்டி வியாபித்துக் கொண்டு போயிருப்பதில் நஷ்டஈடு ரூபாய் 800—வாப்பற்றவும் இஞ்சங்ஷன் பரிகாரம் கோரியும் ஷை நம்பரில் பிருது செய்திருப்பதில் இஷ்யூவுக்காக 2—9—1936 தேதிக்கி வாயிதா யேற்படுத்தப்பட்டிருக்கிறது. அன்று பகல் பத்துமணிக்கு 7-8 பிரதிவாதிகள் ஷை கோர்ட்டு முன் ஆஜருகி ஆக்ஷேபனைகளைத் தெரிவித்துக் கொள்ள வேண்டியது. தவறினல் எக்ஸ்பார்ட்டி செய்யப்படும்.

A. Ganapathi Iyer,
வாதி வக்கீல்.

## கம்பெனி ஷேர் விலைகள்.

(கதிரேசன் கம்பெனியாரிடமிருந்து)

காரைக்குடி, ஆகஸ்டு 26

கெவர்ன்மெண்டு பத்திரங்கள் சற்று நிதானமாக இருந்து வருவதால் பாங்கு ஷேர்கள் மந்தமாகவே இருந்துவருகிறது.

இன்சூரன்ஸ் கம்பெனி ஷேர்கள் எப்போதும்போல் நடந்தது. பஞ்சு விலைகள் இறக்கமடைந்துள்ளதால் மில் ஷேர்களுக்கு கிருக்கியில்லை. எலெக்டிரிக் கம்பெனி ஷேர்கள் சுறு சுறுப்புடன் குறிப்பிட்ட விலைக்கு விற்பனை நடந்தது.

சர்க்கரை கம்பெனி, டி கம்பெனி, ரப்பர் கம்பெனி ஷேர்கள் நிதானமாக இருந்து வருகிறது.

| ஷேர் விலை. | டிவிடெண்டு | பெயர் | நடப்பு விலை. |
|---|---|---|---|
| | | **பாங்குகள்.** | |
| 100 | 3½% | ரிசர்வு பாங்கு | 135 |
| 25 | 6% | சென்டிரல் பாங்கு | 34½ |
| 50 | 12% | இந்தியன் பாங்கு | 137 |
| 10 | 12% | ஷை | 28¼ |
| 50 | 7½% | திருவாங்கூர் நேஷனல் | 53½ |
| 25 | 9% | கொல்லம் பாங்கு | 27 |
| 100 | 6% | இன்டோ கமர்சியல் | 115 |
| | | **மில்கள்** | |
| 100 | 20% | காளீஸ்வரர் | 290 |
| 100 | 7% | கோகாக் | 202 |
| .00 | 12% | ராதாகிருஷ்ண | 135 |
| 100 | 7½% | வசந்தா | 107 |
| 100 | 6% | காட்டன் | 97 |
| 50 | 10% | லெட்சுமி | 53 |
| 50 | 8% | ராஜலெட்சுமி | 51½ |
| 15 | 10% | ம ரை | 32½ |
| 10 | 8% | கம்போடியா | 11 |
| 200 | 8% | மலபார் மில்ஸ் | 192 |
| 100 | 2½% | மகாலெட்சுமி | 38 |
| 100 | 6% | பங்கஜா மில்ஸ் | 95 |
| 100 | இல்லை | சீதாராம் | 35 |
| 100 | 7½% | தனலெட்சுமி | 105 |
| 75 | 8% | ரெங்கவிலாஸ் | 58 |
| | | **மின்சார கம்பெனி** | |
| 100 | 10% | திருச்சி ஸ்ரீரங்கம் | 200 |
| 100 | 3% | கிழக்கு தஞ்சாவூர் | 110 |
| 10 | 6% | கும்பகோணம் | 14¼ |
| 10 | 7½% | வேலூர் | 5½ |
| 10 | 4¾% | வெஸ்ட்கோஸ்டு | 10½ |
| 40 | 2½% | காரைக்கால் | 45 |
| | | **இன்சூரன்ஸ்.** | |
| 15 | 8 5/16% | நியூ இந்தியா | 47 |
| 15 | 5% | ஜூபிடர் ஜெனரல் | 14 |
| 10 | 5% | வல்கன் | 8 |
| | | **சர்க்கரை கம்பெனி** | |
| 100 | 35% | டெக்கான் சுகர் | 465 |
| 25 | 35% | ஷை | 115 |
| 10 | 25% | கான்பூர் ஷுகர் | 37 |
| 10 | 12½% | காரு & கோ | 24 |
| 10 | புதிது | பூலண்டு சுகர் | 14 |
| 10 | 2½% | பாரத் சுகர் | 9½ |
| 10 | 12½% | மைசூர் சுகர் | 32½ |
| 10 | புதிது | இந்தியா சுகர் | 8 |
| 10 | இல்லை | சமஸ்டிபூர் சுகர் | 9½ |
| | | **டீ & ரப்பர் கம்பெனி.** | |
| 10 | 20% | வெள்ளையமட்டம் | 23 |
| 10 | 12½% | கூர்க்த ரப்பர் | 19 |
| 10 | புதிது | கல்பட்டா ரப்பர் | 17 |
| 10 | 17½% | ஹைலண்டு புரேட்யூஸ் | 19 |
| 10 | 4% | தேவ சோலாடீ | 7 |
| 22½ | 5% | டிராபிகல் பிளாண்டேஷன் | 12 |
| 10 | புதிது | பிரிஞ்சு போர்டு | 11½ |
| | | **மிஸ்லேனியஸ்.** | |
| 9 | 7½% | பர்மா கார்ப்பரேஷன் | 8 |
| 10 | 4½% | பிரைமியர் ஹோசரி | 7½ |
| 10 | 20% | புண்டி சிமிண்டு | 37½ |
| 10 | 7½% | பஞ்சாப் சிமிண்டு | 26¾ |
| 90 | 11¼% | கோயமுத்தூர் சிமிண்டு | 192 |
| 15 | 2½% | சின்டியா ஸ்டீம் நாவிகே. | 20½ |
| 6 | புதிது | பிரிட்டீஷ் பர்மாபெட். | 6 |
| 10 | 30% | ஹௌரா சணல் மில் | 53½ |
| 10 | 7½% | கிளைவ் சணல் மில் | 26 |
| 10 | 12½% | நேஷனல் சணல் மில் | 23 |
| 10 | 10% | சிட்வலசு சணல் மில் | 20 |
| 4 | புதிது | மைசூர் பேப்பர் மில் | 7¾ |
| 5 | புதிது | ஓரியண்ட் பேப்பர் மில் | 6¼ |
| 25 | 25% | பெங்கால் பேப்பர் மில் | 110 |
| 2½ | 55% | டிடாக்கூர் பேப்பர் மில் | 23 |

## காங்கிரஸ் தேர்தல் அறிக்கை

(9-ம் பக்கத் தொடர்ச்சி)

மிக்க அபிப்பிராயபேதம் ஏற்பட்டுள்ளது. அத்தீர்ப்புபற்றி காங்கிரஸின் நோக்கத்தையும் சிலர் தவருக எண்ணியுள்ளனர். காங்கிரஸ் மகாசபையானது புதிய அரசியல் திட்டத்தை முழுவதும் நிராகரித்தபடியால் சமூகத் தீர்ப்பையும் நிராகரித்ததே யாகும். அரசியல் திட்டத்தில் சேர்க்காமல் தனியாக அத்தீர்ப்பை கவனித்தாலும் அது முற்றிலும் ஒத்துக்கொள்ளத் தக்கதல்ல; பூரண சுயேச்சைக்கும் ஜனநாயகக் கொள்கைக்கும் முற்றிலும் முரண்பட்டதாக விருக்கிறது; அத்தீர்ப்பு சமூதாயத்தில் பல பிளவுகளை உண்டுபண்ணத் தக்கதாகவும் தேசிய முன்னேற்றத்திற்கு முட்டுக்கட்டையாகவு மிருக்கிறது. இந்தியர் ஒற்றுமைக்குப் பங்கம் விளைவிப்பதாகவு மிருக்கிறது. உண்மையில் சமூகத் தீர்ப்பால் எந்த சமூகத்திற்கும் லாபமில்லை; அதனல் சிலருக்கு ஏற்படும் அற்ப அநுகூலங்களைவிட இந்தியாவுக்குப் பெரும் பாதகம் விளைந்திருப்பதையே கவனிக்க வேண்டும் எந்த சமூகத்தாருக்கு சலுகை காட்டுகிறதோ அவர்களுக்கே அத்தீர்ப்பால் முடிவில் பாதகம் விளையும். நம்மைச் சுரண்டியும் ஆட்சிபுரிந்தும் வரும் மூன்ருவது கட்சியினருக்கே உண்மையில் லாபம் கிடைக்கும். ஆகவே சமூகத் தீர்ப்பு சம்பந்தமாக காங்கிரஸ் அசிரத்தை காட்டவோ அல்லது நடுநிலைமை விகிக்கவோ இல்லை. சமூகத்தீர்ப்பை காங்கிரஸ் மகாசபையானது பலமாக நிராகரிக்கிறது; அதனை ஒழிக்கவும் விரும்புகிறது. முக்கியமான சமூகத்தாரின் நல்லெண்ணத்தாலும் ஒத்துழைப்பாலுமே சமூக பிரச்னை சம்பந்தமாக திருப்திகரமானமுடிவு ஏற்படுமென்பதை காங்கிரஸ் பலதடவைகளில் வற்புறுத்திவருகிறது. ஒரு சமூகத்தார் மற்ருெரு சமூகத்தாருக்குப் பிரதிகூலம் ஏற்படும் பிரிட்டிஷ் சர்க்காரிடமிருந்து ஏதோ சலுகைபெற முயலுவதால் சமூகத் துவேஷம் அதிகரிக்கிறது. சர்க்கார் இரு தரப்பாரையும் சண்டையிடச் செய்து நன்மையடைகின்றனர். சலுகை கேட்கும் கொள்கை இந்திய தேசியத்தின் மதிப்புக்கு ஒத்ததல்ல; பூரண சுயேச்சைப்போராட்டத்திற்கும் பொருந்தமானதல்ல. நீண்ட காலப் போக்கில் இவ்வித கொள்கை எந்தத் தரப்பாருக்கும் அநுகூலம் செய்வதல்ல. இதனல் முக்கியமான பிரச்னைக்குத் தடை விளைகிறதே யொழிய வேறில்லை. சமூகத் தீர்ப்பால் ஏற்பட்டுள்ள நிலைமையை நிர்வகிக்கச் சரியான வழியாக பூரண சுயேச்சைப் போராட்டத்தைத் தீவிரமாக நடத்தி வரும். அதே சமயத்தில் சமூக ஒற்றுமைக்கு முயற்சி செய்வதுமேயாகும். ஒரு சமூகத்தார் மற்ருெரு சமூகத்தாரின் எதிர்ப்பிற்கிடையே சமூகத் தீர்ப்பை மாற்ற முயற்சி செய்வதால் அந்த தீர்ப்பை ஊர்ஜிதம் செய்வதாக முடியும். இருதரப்பாருக்குள் போராட்டத்தால் ஏற்படும் நிலைமை அத்தகைய தீர்ப்பை அமுலுக்குக் கொண்டுவர, சர்க்காருக்கு சாதகமாகவே இருக்கும். ஆகவே ஒருதரப்பார் கிளர்ச்சி செய்வதால் பிரயோஜனம் ஏற்படாதென்று காங்கிரஸ் அபிப்பிராயப்படுகிறது. சமூகப் பிரச்னையானது முக்கியமானதாக இருந்த போதிலும் இந்தியாவின் மகத்தான பிரச்னைகளான வறுமையையும் வேலையில்லாத் திண்டாட்டத்தையும் பாதிக்கவே இல்லையென்பதை ஞாபகத்தில் வைக்கவேண்டுவது அவசியமாகும். சமூகப் பிரச்னையானது மத சம்பந்தப்பட்டதுமல்ல. உயர்ந்த அந்தஸ்திலுள்ள சிலரையே அது பாதிக்கிறது. விவசாயிகள் தொழிலாளர் வர்த்தகர்கள் நடுத்தர ஸ்திதியிலுள்ளவர்கள் இவர்களை அது பாதிக்கவே இல்லை. இவர்களது பாரம் நிலை பெற்றவண்ணமாகவே இருக்கிறது.

### பதவி ஏற்கும் பிரச்னை

புதிய அரசியலின்கீழ் மந்திரி பதவி ஏற்பதா இல்லையா வென்பதை லட்சுமணபுரி காங்கிரஸ் ஒத்திவைத்தது தேர்தல்களுக்குப் பின் அவ்விஷயத்தைப்பற்றி முடிவு செய்வது உஜிதமென்று இந்திய காங்கிரஸ் கமிட்டி அபிப்பிராயப்படுகிறது. அவ்விஷயத்தைப்பற்றி என்ன முடிவு ஏற்பட்ட போதிலும் காங்கிரஸ் நோக்கம் புதிய அரசியலை நிராகரிப்பதென்பதையும் அதனை அமுலுக்குக் கொண்டுவருவதில் ஒத்துழைப்பதல்ல வென்பதையும் மறந்துவிடக் கூடாது. புதிய அரசியலை சமாப்தி செய்ய வேண்டுமென்ற நோக்கம் மாறவில்லை. இந்நோக்கத்துடன் ஐக்கிய சர்க்கார் அமுலுக்கு வருவதைத் தடுக்க சகல பிரயாசைகளும் மேற்கொள்வோம். இத்தேசம் முழுவதிலும் ஏகாதிபத்ய ஆதிக்கத்தையும் மன்னர், பிரபுக்கள், செல்வந்தர் ஆதிக்கத்தையும் நிலைபெறச் செய்வதும் சுதந்திரத்திற்கு தடையாக விருப்பதுமே ஐக்கிய சர்க்கார் திட்டத்தின் நோக்கமாகும். மாகாண சட்டசபைகளே ஐக்கிய சர்க்கார் சட்டசபைகளுக்கு தேர்தல் தொகுதிகளாகும். ஆகவே மாகாண சட்டசபைகளின் அமைப்பு ஐக்கிய சர்க்கார் திட்டத்தின் கதியைப் பாதிக்கும்.

### தேசமக்களுக்கு வேண்டுகோள்

வரப்போகும் தேர்தல்களில் காங்கிரஸிற்குப் பூரணஆதரவு அளிக்கும்படி நாங்கள் தேசமக்களை வேண்டிக் கொள்கின்றோம். தேசமக்கள் ஆதரவு தேச க்ஷேமாபிவிருத்திக்கும் பூரண சுயேச்சைப் போராட்டத்திற்கும் அவசியமாகும்.

எனவே காங்கிரசையும் இந்தியாவையும் சுதந்திரத்தையும் ஆதரிக்கும்படி நாங்கள் தேசமக்களை அழைக்கின்றோம்.

## நோட்டீஸ்

சிவகெங்கை

### சப் கோர்ட்டில்

1936-ஹூ E. P. நம்பர் 46.

ரூமனுட் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டு

1931-ஹூ O. S. நம்பர் 9.

அருப்புக்கோட்டை வீரய்யா செட்டியார் } 2-ம் வாதி.

அருப்புக்கோட்டை லேட் ஷண்முகம் பிள்ளை மகன் மைனர் வெங்கிடாசலம் பிள்ளை } 1ம்பிரதிவாதி.

ஷை மைனர் 1-ம் பிரதிவாதிக்கு ரூமனுதபுரம் டிஸ்டிரிக்ட்டு கோர்ட்டில் மதுரை வக்கீல் V. ஜம்புசாமி சாஸ்திரிகள் என்ற ஒருவரை Guardian adlitem ஆக நியமித்திருந்ததில் ஷையார் இப்போது இருக்குமிடம் தெரியவில்லையானதால் ஷை E. P. நம்பர் 46 of 1936 லிலும் E. A. நம்பர் 79 of 1936 லிலும் ஷை மைனர் 1-ம் பிரதிவாதிக்கு எழுவங்கோட்டைத் தாலூகா ஆருவயலிலிருக்கும் சொக்கலிங்கம் பிள்ளை பெண்ஜாதி பொன்னம்மாள் என்பவளை கார்டியனுக நியமித்துக் கொள்ளும்படிக்கும் ஷையாள் ஒத்துக் கொள்ளாவிட்டால் கோர்ட்டு ஆபீசர்களில் ஒருவரை கார்டியனுக நியமித்துக்கொள்ளும்படிக்கும் கோரி E. A. 210 of 1936, E. A. 211 of 1936 லில் ஷை 2-ம் வாதி மனுச் செய்துகொண்டிருப்பதில் நோட்டீசுக்கு உத்திரவு செய்து 10—9—1936-ந் தேதிக்கு வாய்தா யேற்படுத்தப்பட்டிருக்கிறது. மேலே கண்ட பொன்னம்மாள் ஷை மைனருக்கு கார்டியனுக இருக்க இஷ்டப்படும் பக்ஷத்தில் ஷையாள் ஷை விஷயத்தை 10—9—1936-ந் தேதி பகல் பத்து மணிக்கு சிவகெங்கை சப் கோர்ட்டு முன்பாக நேரில் அல்லது வக்கீல் மூலம் ஆஜருகித் தெரிவித்துக் கொள்ள வேண்டியது. தவறினல் கோர்ட்டு ஆபீசர்களில் ஒருவரை ஷை மைனருக்கு கார்டியனுக நியமித்துக் கொண்டு மேலே கண்ட E. P. 46 of 1936 யும் E. A. 79 of 1936 யும் மேல் நடத்தப்படும்.

A. Ganapathi Iyer,
2-ம் வாதியின் வக்கீல்,
சிவகெங்கை.



## ரொடேசியாவில் விபசார வாழ்க்கை

### அரசாங்கத்தின் அநுமதி

(ரைட் ஆனரபிள். டாம் ஜான்ஸன்)

தென் ரொடேசியாவில் சுரங்கங்களில் வேலை செய்யும் சுறுசுறுப்பு மனிதர்களுக்கு அரசாங்கம் விலைமகளிர்களை அளிக்கிறது. அங்குள்ள தங்கச் சுரங்கங்களுக்கு ஏராளமான நீக்ரோ தொழிலாளர் தேவை. இத் தொழிலாளர்கள் நியாஸாலாந்திலிருந்து கொண்டுவரப் படுகிருர்கள். இத்தொழிலாளர்கள் தங்கள் மனைவி மக்களுடன் வசிக்கப் போதிய ஆதரவு அளிக்க அரசாங்கம் முன்வரவில்லை.

### தீய ஒழுக்கங்கள்

சுரங்கங்களில் மாத்திரம் இவ்விதத் தொழிலாளர் 22,000 பேர் இருக்கிருர் இவர்கள் தங்கள் மனைவி மக்களை விட்டுப் பிரிந்திருக்கிருர்கள். ஆகவே அங்கு இயற்கைக்கு விரோதமான தீய ஒழுக்கங்கள் தாண்டவமாடுகின்றன.

குடும்ப முறைக்கு ஆதரவு அளிப்பதை விடுத்துத் தென் ரொடேசிய அரசாங்கம் விலைமகளிர்க்கு "லைஸென்ஸ்" அளிக்கிறது. பிரிட்டிஷ் பார்லிமெண்டில் இம்முறை கண்டிக்கப்பட்டது.

தொழிலாளி எவ்வளவு நாட்கள் அங்கு வேலை செய்கிருனே அவ்வளவு நாட்களுக்கும் அவனுக்கு ஒரு விலைமகள் அளிக்கப்படுவாள். ஓரிடத்தில் ஒரு தொழிலாளி சகஜமாகப் பதினேரு மாதங்களே வேலை செய்வான். அந்த நாள் முழுதும் அவனிடம் ஒரு பெண்மணி விபசாரம் செய்து வாழ்தல் வேண்டும். வேலை முடிந்ததும் தொழிலாளி தன் இனத்தவருடன் சேர்ந்து கொள்ளச் செல்வான்.

அதன்பின் விபசார வாழ்வு நடாத்திய அப்பெண்மணி விரும்பினல் மற்ருெரு தொழிலாளியிடம் வசிக்கலாம். என்ன அநியாயம்! அவளைப் போஷிக்கும் தொழிலாளிக்கு வருஷம் ஒன்றுக்குப் பதின்மூன்று பவுனே கூலியாகக் கிடைக்கிறது.

### புதுக்கோட்டை தெக்ஷிணுமூர்த்தி பிள்ளை ஞாபகச் சின்னம்

காலஞ்சென்ற புதுக்கோட்டை மிருதங்கம் கஞ்சிரா வித்வான் ஸ்ரீமான தெக்ஷிணுமூர்த்தி பிள்ளை, தென்இந்தியா சங்கீத கோஷ்டியில் மிகப் பிரகாசமாய்ப் பிரகாசித்துத் தனது ஜனன பூமியாகிய புதுக்கோட்டைக்கு ஒரு பெரும் கௌரவத்தைக் கொடுத்திருப்பதால் அவர் ஜனன பூமியாகிய இப் புதுக்கோட்டையில் ஒரு மெமோரியல் ஸ்தாபனம் செய்ய 30-7-36ல் ஒரு பொதுக் கூட்டம் கூடப்பட்டது.

அந்தக் கூட்டத்தில் R. தெக்ஷிணுமூர்த்தி பிள்ளை அவர்களின் ஞாபக சின்னத்துக்காக (1) டவுன் ஹாலில் லேட் பிள்ளை அவர்களின் உருவப்படம் வைக்கிறது. (2) அவர் குடும்பத்துக்கு ரூ. 1,000 கொண்ட ஒரு பர்ஸ் மரியாதைக்காக கொடுக்கிறது; (3) டவுன் ஹாலை ஒட்டி ஒரு புதுக்கட்டிடம் நிர்மாணம் செய்து அவர் மெமோரியல் ஹால் என்று அதற்கு பெயரிடுவது என்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

16-8-36ல் நடந்த முதல் நிர்வாக சபைக் கூட்டத்தில் ஷை காரியங்களை நிறைவேற்ற ரூ. 5,000-துக்குக் குறைவில்லாமல் தொகை வேண்டியிருக்கும் என்று நிர்ணயிக்கப்பட்டு, இந்த விவரத்தை சகலருக்கும் தெரியப்படுத்தி வசூல் செய்யும்படி என்னைக் கட்டளையிட்டிருக்கிருர்கள்.

காலஞ்சென்ற பிள்ளையவர்கள் தென் இந்தியாவில் புகழையும், பெருமையையும் சம்பாதித்துக் கொடுத்திருக்க, அவருக்கு அவர் ஜனன பூமியாகிய இந்தப் புதுக்கோட்டையில் ஒரு ஞாபகச் சின்னத்தைப் பூர்த்தி செய்து வைக்க வேண்டியது அவசியமாகையால், தென் இந்தியா வாசிகள், இவ்வூர் நகரவாசிகள், நகரத்தார், ஸங்கீத அபிமானிகள் எல்லோரும் இவ்விஷயத்தில் போதிய சிரத்தை எடுத்துக் கொண்டு தங்களாலியன்ற உதவியை அடியேனுக்கு அனுப்ப வேணுமாய் கேட்டுக் கொள்கிறேன் என்று காரியதரிசி T. S. ரெங்கஸாமி அய்யர், அறிவிக்கிருர்.

பிரபல சங்கீத வித்வான்களும் இதர பிரபலஸ்தர்களும் சேர்ந்த கமிட்டியொன்றும் நியமிக்கப்பட்டிருக்கிறது.

## வேலியே பயிரை அழிப்பதா?

### போலீஸ் மீது பெண் சோர வழக்கு

ஒரு மகஜனின் குமாரியைத் தூக்கிச் சென்றதாக 2 போலீஸ் ஹெட்கான்ஸ்டபில்கள் ஒரு கான்ஸ்டபில் மற்றும் 3 பேர் ஆகிய 6-பேர் மீது வழக்குத் தொடரப் பட்டிருந்தது. பாலி முதல் வகுப்பு மாஜிஸ்திரேட் ஸ்ரீமான் சகன்லால்ஜி மதுரா மார்வார் பினல்கோடு 366, 147, 120 பி. பிரிவுகளின்படி எதிரிகள்மீது குறற்பத்திரிகை படித்து எதிரிகளை செஷன்ஸ் விசாரணைக் கனுப்பினர். பிராஸிகூஷன் தரப்பார் சொல்லுகிறபடி வழக்கு விவரம் வருமாறு:--

கூறுவர் என்ற கிராமத்தைச் சேர்ந்த மகஜனசர்தார் என்பவர் மல்குர்வாஸ் என்ற கிராமத்தைச் சேர்ந்த தாராசந்து என்பவருக்கு தமது குமாரியான பியாரியை விவாகம் செய்துகொடுக்க ஏற்பாடு செய்திருந்தார். ஆனல், பிறகு அவர் குமாரியைத் தாராசந்துக்கு விவாகம் செய்துகொடுக்க மறுத்துவிட்டாராம். இதன் பேரில் தாராசந்து கிராம போலீசாருடன் கலந்து ஆலோசித்ததில் அவர்கள் பியாரியைத் தூக்கி வந்து தாராசந்துக்கு விவாகம் செய்துகொடுப்பதாக வாக்களித்தனராம். கிராமப் போலீஸார் அமார்சிங் என்ற கான்ஸ்டபிலை மற்றும் 5 பேருடன் அனுப்பி 13 வயதுள்ள பியாரியை அவளது வீட்டிலிருந்து, அவளது தகப்பனில்லாத சமயத்தில், தூக்கிக்கொண்டு போய் தாராசந்து இருந்த காட்டில் விட்டுவிட்டனராம். அன்றிரவு தாராசந்து அவளைக் கற்பழித்தாராம்.

### கூலிமில் தேநீர் விருந்து

கூலிம் செட்டியார்கள், பியாட்மெண்டன், பார்ட்டியார்கள் ஷை பார்ட்டி ஸ்ப்போட்ஸ் காப்டன் திருவாளர். எமு. மு. பழ. முத்துக்கருப்பனு செட்டியாரும் மு. ராம. மு. இராமனுதன் செட்டியாரும், தாய் நாட்டிற்குச் செல்வதைக் கருதி கண. சி. பழ. பழனியப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் 29-7-1936 இரவு 7 மணிக்கு ஜாலன்ராயா 4 நம்பர் வீட்டில் ஓர் தேனீர் விருந்து நடத்தி உபசரித்தார்கள். தலைவர் கண. சி. பழ. பழனியப்ப செட்டியாரவர்கள் விருந்தினர்களின் ஒத்துழைப்பை பாராட்டிப் பேசினர்கள். காரியதரிசி நா. செ. நா. சுப்பிரமணியன் செட்டியார் விருந்தினர்களின் ஊக்கத்தையும் பொது நல சேவையைப்பற்றியும் பார்ட்டியின் வளர்ச்சி கருதி உழைத்ததையும் பாராட்டிப் பேசினர்கள். சுங்கைப்பட்டாணி மு. ஏகப்பா அவர்கள் விளையாட்டின் நன்மைகளைப்பற்றியம் விருந்தினர்களின் குணங்களைப்பாராட்டியும் க. அரு. மு. காசிநாதன் அவர்கள் ஸ்ப்போட்சின் அவசியத்தைப்பற்றியும் அழகாகப் பேசினர்கள். விருந்தினர்கள் இருவரும் தங்களைப்பாராட்டி உபசரித்து தேனீர் விருந்து நடத்திய பியாட்மெண்டன் பார்ட்டியாருக்கு அவர்களது மனமார்ந்த நன்றியறிதலை தெரிவித்துக் கொள்வதாகவும், பேசினர்கள். காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பெற்று விருந்து இனிது முடிந்தது.



## காங்கிரசுக்கு மெஜாரிட்டி கிடைக்காது

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

யமான பிரயோஜனத்தை நாம் இழக்கும்படி செய்யும்.

### சட்டசபை வேலை

வேலைத்திட்டம் குறிப்பாக இருக்கவேண்டும்; பொதுப்படையாக வழவழா என்றிருக்கக்கூடாது. செய்யபோகும் வேலை என்ன? அவைகளை நிறைவேற்றி வைக்க எடுத்துக் கொள்ளப்போகும் நடவடிக்கைகள் யாவை? இவைகளைக் குறிப்பாக, தெளிவாக ஜனங்களுக்கு அறிவித்துவிடவேண்டும். அந்தப் பிரச்னையை இரண்டு பகுதிகளாகக் கவனிக்கவேண்டும்.

புதிய மாகாண அசெம்பிளிகளில் காங்கிரஸ் கட்சிகள், மெஜாரிடியாக இருந்தால் செயப்போவதென்ன? மைனாரிடியாயிருந்தால் செய்யப்போவதென்ன?

### தற்கொலை

மைனாரிடியாக இருக்குமிடங்களில் மற்ற கக்ஷிகளுடன் சேர்ந்து கூட்டு மந்திரி சபையை அமைக்க காங்கிரஸ் அனுமதியளித்தால் தான் பதவி ஏற்கும் பிரச்னை அங்கு எழும். மற்றக் கட்சிகளுடன் சேர்ந்து காங்கிரஸ் கூடி மந்திரி சபையை அமைத்தால், அது தற்கொலை செய்துகொள்வதற்கு ஒப்பாகுமென்றே நான் நினைக்கிறேன். ஆகையால் காங்கிரஸ் கக்ஷி மற்றெல்லாக் கக்ஷியையும் விட மெஜாரிடியாக இருக்குமிடங்களில் தான் பதவி ஏற்கும் பிரச்னை முக்கியமாய் கவனிக்கவேண்டிய விஷயம். ஆனால் சட்டசபை வேலைத் திட்டத்தில் பதவி ஏற்கும் பிரச்னை ஒன்றுதான் முக்கியமானதென்று நினைப்பது தவறு.

### மெஜாரிட்டி கிடைக்காது

காங்கிரஸ் கக்ஷிகள் மைனாரிடி கக்ஷிகளாக இருக்கும் இடங்களில் அவை என்ன செய்யவேண்டும் என்பது, பதவி ஏற்பதை விட மிகவும் முக்கியமான விஷயம். பெருவாரியான மாகாணங்களில் காங்கிரஸ் கக்ஷிகளுக்கு மற்றெல்லாக் கக்ஷிகளையும் விட அதிகமான ஸ்தானங்கள் கிடைக்குமென நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால், மந்திரி சபைகளை ஏற்படுத்தவோ, அல்லது விரட்டவோ கூடிய நிலைமையில் அவை இருக்குமென்றே நான் எதிர்பார்க்கிறேன். ஒவ்வொரு மந்திரி சபையையும் தோற்கடித்து அரசியலை உடைத்துவிடவேண்டும் எனக் கூறிவிடலாம். ஆனால் அப்படிச் செய்வது பிற்போக்குக் கட்சிகள் எல்லாம் ஒன்றாய் ஐக்கியப்படுவதற்கு உதவியளிக்குமே ஒழிய வேறொன்றும் செய்யாது.

### பதவி ஏற்றதும்

காங்கிரஸ் சட்சியார் பதவி ஏற்றவுடன் முதல் சில வாரங்களுக்குள்ளாகவே அமுலுக்கு கொண்டுவரப்போகும் ஒரு தீவிர வேலைத்திட்டத்தை வகுத்துக் கொள்வதே சிறந்த ராஜதந்திரமாகும். அதை, கவர்னர் அனுமதிப்பாரா, இல்லையா என்பதைப்பற்றிக் கவலையில்லை. அவர் எப்படி வேண்டுமானாலும் முடிவு செய்துக் கொள்ளட்டும். அவர் அனுமதித்தால் ஜனங்களின் பேராதரவு காங்கிரசுக்கு அபரிமிதமாகக் கிடைக்கும். அனுமதிக்கவில்லை யென்றால் அரசியலை நடத்த தன்னால் முடியவில்லை என்று ஒப்புக்கொள்ள வேண்டிய மோசமான நிலைமையை கவர்னர் அடையவேண்டி நேரிடும்.

## பொதுஜன முன்னேற்ற சங்கம்

கண்டரமாணிக்கம், ஆக. 22

19-8-36 மாலை 4 மணிக்கு தலைவர் லெ. ஆ. கருப்பையா அம்பலம் அவர்கள் தலைமையில் மாதாந்தர விசேஷப் பொதுக்கூட்டம் நடைபெற்றது. அவ்வமயம் ஆடிமாதத்திய கணக்குகள் பரிசீலனை செய்யப்பட்டன. பொக்கிஷதார் மு. வீர. சுப்பையாபிள்ளை அவர்கள் அயல்நாடு செல்வதை முன்னிட்டு அவருக்குப்பதிலாக திரு. வயி. கி. லெட்சுமணன் சேருவையவர்கள், பொக்கிஷதாரராக ஏகமனதுடன் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

அதன் பின் இவ்வூரில் எல்லா வகுப்பினருடைய பெண் குழந்தைகளையும் அவசியம் கல்வி பயில்விப்பதற்கு ஆவன செய்யவேண்டுமென்றும் ஹரிஜனங்கள் வசிக்குமிடத்தில் போதிய தண்ணீர் வசதியில்லாததால் அந்த இடத்தில் கிணறு வெட்டுவதற்கு ஏற்பாடுகள் செய்யவேண்டியதவசியமென்பதையும் காரியதரிசி சி. ஆதி. ஆதினமிளகி சேர்வை அவர்களால் பிரரேபனை கொண்டுவரப்பட்டது. அதுவும் ஏகமனதாக ஆமோதிக்கப்பட்டது. பின்னர் நன்றி பாராட்டுதலுடன் இரவு 7-மணிக்கு ஜெயகோஷத்துடன் கூட்டம் நிறைவெய்தியது. (காரியதரிசி)

### ஹரிஜனங்களுக்கு செட்டியாரின் உதவி

ஆவணிமீ 6உ காளையார் மங்கலம் நாட்டுக்கோட்டை மரபினரான திரு. V. R. PL. K. N. கண்ணப்ப செட்டியாரவர்களால் ஹரிஜன சேரியில் நாட்டரசன்கோட்டைக்குச் செல்லுகின்ற ரோட்டிற்கு மேல் 300 ரூ. வரை செலவு செய்து பெரிய கிணறொன்றைக் கட்டி முடித்து உதவியிருக்கிறார்கள். மதகுபட்டி திரு. சொ. கண. முத்தையா அவர்கள் கேட்டுக்கொண்டபடி இக்கிணற்றினை அலவாக்கோட்டை ஸ்ரீமதி பி. நா. சொ. விசாலாட்சியம்மாள் அவர்கள் திறந்து வைத்து செட்டியாரவர்களின் நற்பணியையும் தர்ம சிந்தனையையும் ஹரிஜனங்களுக்கு இத்தகைய தர்மங்களைச் செய்து உதவ வேண்டிய அவசியத்தையும் விளக்கி ஓர் நீண்ட சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அன்று தினம் திரு கண்ணப்ப செட்டியாரவர்களால் 300 ஹரிஜனங்களுக்கு உணவும் அளிக்கப் பெற்றது. வந்திருந்தோர் அனைவருக்கும் தேங்காய் பழம் வெற்றிலை பாக்கு முதலியன வழங்கப்பெற்று திறப்புவிழா இனிது நிறைவெய்தியது.

## அபிசீனியாவில் இதாலியின் பரிதாபம்

### விரும்பாத வெற்றியில் எதிர் பாரா அனர்த்தம்!

பாரிஸ், ஆக, 14—

அபிசீனிய மன்னர் நாட்டைத் துறந்து ஓடி விடுவார் என்று இத்தாலியர் எதிர் பார்க்கவேயில்லை. மன்னர் தோற்கடிக்கப்பட்டால், பிறகு அவரையே ஒரு பொம்மை ராஜாவாக வைத்துக் கொண்டு, இத்தாலியின் ஆதிக்கத்தை ஸ்திரப்படுத்த அவரை ஓர் கருவியாக வைக்கலாமென்று முசோலினி எண்ணியிருந்தார்.

அவ்வாறு நடக்காமல் மன்னர் நாட்டைவிட்டு வெளியேறியதால் இந்தப் பெரிய நாட்டை நிர்வகிப்பதே இத்தாலியருக்கு அசாத்தியமாக இருக்கிறது. தமது வெற்றியின் பயனை அனுபவிக்க வழியில்லை.

ஹோர்—லவால் திட்டத்துக்கு அதிகமாக வேறெது கிடைத்தாலும் இத்தாலியால் சமாளிக்க முடியாது என்பதை அவர்கள் அறிந்தே இருந்தார்கள்.

அபிசீனியாவில் உள்ள பல்வேறு ஜாதிகளிடம் எப்படிப் பழகுவது என்பதே இத்தாலியருக்குப் பெரிய பிரச்னையாக இருக்கிறது. விஸ்தீரணத்தில் பிரான்சைவிடப் பெரிதான அபிசீனிய ராஜ்யத்தை, அந்த நாட்டினரின் உதவியில்லாமல் நிர்வகிக்கவே முடியாது. இப்போது அபிசீனியாவில் 200,000 இத்தாலிய சோல்ஜர்கள் இருக்கிறார்கள். இவர்கள் அங்கு வசிப்பதற்கு சர்க்கார் செலவிடும் பணம் யுத்தச்செலவுக்கு சமமாகவே இருக்கிறது.

எப்படியாவது அபிசீனிய மன்னருடன் ஒருவித சமரசம் செய்து கொண்டு பெயரளவில் அவரை அரசராக்கி ஒரு இத்தாலிய பாதுகாப்பு நிர்வாகத்தை ஸ்தாபிக்கலாமா என்று இத்தாலியர் யோசித்ததாகத் தெரிகிறது.

இதற்கெல்லாம் மசியாமல் மன்னர் வெளியேறி விட்டதால் இத்தாலிக்கு மிகவும் கஷ்டமான பல பிரச்னைகள் ஏற்பட்டிருக்கின்றன.

### யுத்தம் ஏற்பட்டால்…

எந்த நிமிஷத்தில் ஐரோப்பாவில் யுத்தம் மூண்டுகொள்ளுமோ என்ற பீதி ஏற்பட்டிருக்கின்றது. யுத்தம் ஆரம்பமாகிவிட்டால் இந்தியாவில் சட்டசபைத் தேர்தல்கள் நடைபெறுமாவென்பது சந்தேகமாயிருக்கின்றது.

## நோட்டீஸ்

### தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

1936-ஷு S. C. No. 139.

தேவகோட்டை சிலம்பணி சிதம்பர விநாயகர் தேவஸ்தானம் ஷை ஸோல் டிரஸ்டி அள. சித. அண. சிதம்பரம் செட்டியார் மூலம்………… — வாதி

அனுமந்தகுடி தாலுகா தேவகோட்டையி லிருக்கும் வாசு தேவய்யர் குமாரர் வெங்கிட்ட ராமய்யர்…………… — பிரதிவாதி.

வாதியின் தேவஸ்தான பண்டிலிருந்து ஷை தேவஸ்தானம் Extrustee சித. பள. பழனியப்ப செட்டியார் பிரதிவாதியின் குடும்பச் சிலவுக்காக ரூபாய் 50—0—0 கொடுத்து, அதற்கு ஆதாரமாக ஷையார் பேருக்கு ஷை துகைக்கு மீ 1-க்கு 100-க்கு 1-0-0 வட்டி வீதம் கொடுப்பதாக பிரதிவாதி 1-11-33-ல் எழுதிக் கொடுத்திருக்கும் பிராமிஸரி நோட்டின் பேரில் வரவேண்டிய துகை ரூ. 64—8—0-யும் பின் வட்டி பின் சிலவு சகிதம் வரப்பத்க, வாதியின் Subtrustee-யால் பிரதிவாதி பேரில் பிராது செய்து 29-8-36உக்கு வாய்தா ஏற்பட்டிருப்பதில் ஆக்ஷேபனை யிருந்தால் அன்று வாய்தாவில் பிரதிவாதி ஆஜராகித் தெரிவித்துக்கொள்ள வேண்டியது. தவறினால் எக்ஸ்பார்ட்டி செய்யப்படுவார் என்று அறிவித்திருக்கிறது.

K. R. சுப்பிரமணிய அய்யர்,
அட்வகேட்,
தேவகோட்டை, 23—8—36.









## பணப்பேயின் தாண்டவம்

ஆவி. மெய்யப்பன்.
(காரைக்குடி விவேகானந்தர் சங்கம்)

நம் தனவணிக சமூகமானது தற்பொழுது பணப்பேயின் வசம் சிக்குண்டு நாளுக்கு நாள் நசித்துக்கொண்டே வருகிறது.

நம் சமூகத்திலே பணம் ஏராளமாக விருந்தால் போதுமென்றும், நிதிமிகுந்த ஒருவன் எள்ளளவும் கல்வியறிவில்லாதவனாயினும், எழுத்தறிவில்லாதவனாயினும் பகுத்தறிவில்லாதவனாயினும், பொதுவாக மேன்மாடி காவியாயிருப்பினும் சரி அவனே புவியில் போற்றத்தக்கவனென்றும் எண்ணிவிடுகிறார்கள். இவ்வெண்ணந்தான் முதன் முதலாக நம் சமூகமானது கீழ்நோக்கிச் செல்லக் காரணமாயிருந்துகொண்டு வருகிறது.

வீடோ போ போ என்கிறது, காடோ வா வா என்கிறது. இந்நிலைமையிலுங் கூட சில பணத்திமிர்கொண்ட வயோதிகர்கள் மூன்றாந்தரமாகவும், நான்காந்தரமாகவும் கலியாணஞ் செய்துகொள்கிறார்கள்— என்னே கண்றாவித்தின் விந்தை!

எவ்வளவோ வாலிபர்கள் நன்றாகப் பல கலைகள் கற்றுணர்ந்தவர்களாயும் பெரிய அறிவாளிகளாயும் சமூகத்தொண்டு தேசத் தொண்டாற்றுபவர்களாயு மிருக்கிறார்கள். இவர்களுக்குத் தன்னுடையவாழ்நாட்களில் ஆடம்பரமின்றி வாழப்போதுமான பணமிருக்கிறது. ஆனால் தனக்கு ஒரு இல்லறத் துணைவியை அடைவதற்கோ ரூ. 25000 அல்லது ரூபா 30000 பெண்ணிற்கு மாத்திரம் கொடுக்கவேண்டியிருக்கிறது.

மனிதனுடைய வாழ்வில் கலியாணம் செய்து கொள்ளவேண்டியது முக்கியமான காரியமென்று நினைத்து ரூ 25000, 30000 பெண்ணிற்கு கொடுக்கப்பணமில்லாமல்யாரிடமாவது கடன்வாங்கியாவது கொடுத்து கலியாணத்தை முடிப்போமென்றால் கடன் கொடுப்பார் யாருமில்லை. இவனுடைய அதிர்ஷ்ட வசத்தினால் யாராவது கடன் கொடுக்க முன் வந்தால் தன்னிடம் எக்கனவே இருக்கும் சில துகைகளோடு கடனையும் கொஞ்சம் வாங்கி எப்படியாவது கலியாணத்தை முடித்து விடுகிறான், ஆனால் கலியாணம் முடிந்தமூன்றும் மாதத்திலேயே கடன் கொடுத்த முதலாளி வாரண்டும் கையுமாக வந்துவிடுகிறான்.

வாலிபனோ தன்தினசரி வாழ்விற்குப் போதுமான பொருளில்லாமல் தவித்துக் கொண்டிருக்கும் காலை கடன்காரனுக்கு என்னவகை சொல்லக்கூடும். அப்பொழுது குளம் குட்டைகளில் விழுந்தோ அல்லது தூக்குப்போட்டுக் கொண்டோ தான் மடிவதைத்தவிர வேறு எதை எதிர் பார்க்க முடியும். இவ்விதமாக ஒரு சாராராகிய வாலிபர்கள் துன்பப்பட்டுக் கொண்டிருக்கையில் மற்றொரு சாராராகிய இள நங்கையர்கள் வயோதிகர்களுக்கு வாழ்க்கைப்பட்டு தான் தன் வாழ்நாட்களில் அடையவேண்டிய சுகத்தையடைய முடியாமல் தவிப்பதைக்காட்டிலும் இறப்பதே மேல் என்று எண்ணி விடுகிறார்கள். சிலர் அன்னிய புருடனிடத்திலாவது அச்சுகத்தை யடைய விரும்புகிறார்கள்.

சகோதரர்களே! இளைஞர்களால் செய்ய முடியாத காரியம்உலகத்திலே யாது உளது? ஆகையினால். வாலிபர்களே! தாங்கள் கண் விழித்து வீரஉணர்ச்சியோடு எழுந்து நம் தனவணிக சமூகத்திலே இவ்வித அசம்பாவிதமான காரியங்கள் நடைபெறாவண்ணம் காப்பாற்றுவீர்களாக!

### கும்பியோ

(காரியதரிசி)

11-8-36 மாலை ஐந்து மணிக்கு இவ்வூர் மகாத்மா காந்தி உடற்பயிற்சிக் கழகத்தில் திருவாளர் அ. தி. அ. ராம. ராமனாதஞ் செட்டியார் தலைமையில் திரு. சு. ப. சொ. குமரப்ப செட்டியாரவர்கள் தாய்நாடு செல்வதை முன்னிட்டு ஓர் பிரிவு உபசார விருந்து நடைபெற்றது. ஷையார்களுக்கு மலர்மாலை சூட்டப்பட்ட பின் திரு. பழ. அரு. மெ. ராமனாதஞ் செட்டியாரவர்களாலும் குமாரசாமி முதலியாரவர்களாலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தப்பெற்றன. தலைவரவர்கள் பதிலளித்த பின் சிற்றுண்டிகள் வழங்கப்பட்டன. விருந்தினரால் நன்கொடையாக ரூ. 11, அளிக்கப்பட்டது. இரவு 8 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியது.



### கண்டி போஸ் சங்கம்

மேற்படி சங்கத்தின் நான்காம் ஆண்டு நான்காம் மாதாந்தக் கூட்டம் 16—8—36 ஞாயிற்றுக்கிழமை மாலை 6 மணியளவில் சங்கமண்டபத்தில் திரு இரத்தினசிங்கமவர்களின் தலைமையின் கீழ் நடைபெற்றது. தலைவர் முன்னுரைக்குப் பின்னர் காரியதரிசியால் அறிக்கை வரவுசெலவு கணக்கு கடிதப்போக்கு வரத்து முதலியவைகள் வாசிக்கப்பட்டு ஏகமனதாக அங்கத்தவர்களால் அங்கீகரிக்கப் பட்டன. சங்கத்தின் தலைவர், உபதலைவர்களான திருவாளர்கள் மு. ராம. பழனியப்ப செட்டியாரவர்கள் எஸ். கே. முகமதுலெப்பை முதலியவர்களால் அனுப்பப்பட்ட ராஜினாமாக் கடிதங்கள் யோசிக்கப்பட்டு அங்கீகரிக்கப் பட்டன.

பின்னர் திரு. ராம. பொன்னுச்சாமி அவர்கள், திருவாளர். மு. லெ லெட்சுமணன் செட்டியாரவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று கொண்டு வந்த பிரரேபனை திரு. முத்துராமலிங்கம் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு திரு. ராம. செல்லையா அவர்களால் ஆதரிக்கப்பட்டு பெரும்பாலான வாக்குகளால் நிறைவேற்றப்பட்டது.

அடுத்தபடியாக திருவாளர் ஆரு. கிருஷ்ணனம்பலகாரரவர்களை உபதலைவராகத் தெரிவு செய்யவேண்டுமென்று திரு. ராம. செல்லய்யா அவர்கள் கொண்டுவந்த தீர்மானம் திரு முத்துராமலிங்கம் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு பெரும்பாலான வாக்குகளால் நிறைவேற்றப்பட்டது.

பின்னர் புதிதாகத் தெரிவு செய்யப்பட்ட தலைவர் உபதலைவர்கள் அவர் தம் நன்றியறிதலை அங்கத்தவர்க்கு அறிவித்தனர். தலைவர் முடிவுரைக்குப் பின்னர் காரியதரிசி திரு. சித. சுப்பிரமணியம் அவர்கள் வந்தனோபசாரம் கூற கூட்டம் 8-30 மணிக்கு இனிது கலைந்தது.

### உவாக்கமா

புதுக்கோட்டை பாலபீம் சாண்டோ பற்றமியா மியெஷின் ஹாலில் 14-8-36 வெள்ளிக்கிழமை இரவு 9 மணிக்கு ஷை சாண்டோ டி என் நடேசபிள்ளையவர்கள் அதியற்புதான பீட்களைக் காண்பித்தனர். அன்னாரின் மாணக்கர் வலம்புரி RM. AN. சபாபதி செட்டியார் ஒருவார தீவிரப்பயிற்சியில் (Teeth Lift) டீத் லிப்ட் 283 பவுண்டுகள் தூக்கியமை சபையோரை மிகவும் பரவசமடையச் செய்தது. மற்றொரு மாணக்கர் செங்கற்படை இராமநாதன் வெயிட்லிப்ட்டில்பலவிதலிப்டுகளைச் செய்து காண்பித்தார். பயிற்சியில் வெற்றி பெற்றுவரும் மாணக்கர்களுக்கும் ஆசிரியருக்கும் உவாக்கமா செட்டியார் சங்கத்தின் சார்பாக மலர்மாலை அணிவிக்கப்பெற்றும் ஆசிரியருக்கு M. P. M. S. பாங்கரால் தங்கமெடல் பரிசளிக்கப்பெற்றும் கூட்டம் சுமார் 11-30 மணிக்கு இனிது கலைந்தது.

### சாரதா வாசகசாலைத் திறப்புவிழா

அலவாக்கோட்டை 21-8-36

இன்று காலை 9-30 மணிக்கு இவ்வூரின் நகரப்பொதுக் கட்டிடத்தில் மேல்கண்ட வாசகசாலையை திருவாளர் சி. அரு. சிதம்பரஞ் செட்டியாரவர்களால் திறந்துவைக்கப்பட்டது. திருவாளர். கா. கி. கிருஷ்ணன் செட்டியார் அவர்கள் தலைமைவகித்தார்கள். தலைவர் கல்வி என்னும் விஷயமாகவும் தமிழ்ப்பாடசாலை உபாத்தியாயர் திருவாளர் சிவகுருநாதபிள்ளை அவர்கள் "வாசகசாலையின் அவசியம்" எனும் விஷயமாகவும் மிக அழகாகப் பேசினார்கள். இவ்வருஷத்திற்கு கீழ்க்கண்டவர்கள் உத்தியோகஸ்தர்களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தலைவர் கா. கி. கிருஷ்ணன் செட்டியார். உபதலைவர். சுப. ராம வேலாயுதஞ் செட்டியார். காரியதரிசி அண. சித. ராமனாதஞ் செட்டியார். உப. காரியதரிசி சி. அரு. சின. அருணாசலஞ் செட்டியார். பொக்கிஷதார். சு. ராம. ப. பஞ்சாக்ஷரம் செட்டியார். தலைவர் முடிவுரைக்குப் பின் காரியதரிசியால் வந்தனோபசாரம் கூறப்பட்டு சர்க்கரை கற்கண்டு வழங்கி கூட்டம் இனிது முடிவு பெற்றது.

## சுதேச மன்னர்களின் விபசார வாழ்க்கை

(5-ம் பக்கத் தொடர்ச்சி)

ஹோலிவுட்டிலிருந்து 5 லட்சம் பவுன் கொடுப்பதாகக் கூறி அழைத்தார்கள். அதை அவள் மறுத்துவிட்டு அமிர்த சாஸிலுள்ள அப்துல் ரஹமானை மணம் செய்துகொண்டாள். அங்கு வாழ்க்கையில் கஷ்டங்கள், வழக்கு, மத்தியஸ்தம் மீண்டும் வழக்கு ஆகியவை வரிசையாக உண்டாயின. கடைசியில் அப்துல் ரஹ்மானும் எமனுலகமடைந்தார்.

தனம், காதல், வழக்குகள், துயரம் துக்கமான முடிவு என்று மும்தாஜின் வாழ்க்கை, கேட்பவர் மனம் அதிருமாறு கழிந்தது. இவ்வித வாழ்க்கையை உடைய அழகுமிக்க தனவந்த பெண்மணி ஹோலிவுட்டிற்குச் சென்றதாகச் சொல்லப்படுகிறது. லாஸ் ஏஞ்சல்சில் எதுவும் நடக்கலாம், இந்தூர் மகாராஜா ஓர் அமெரிக்க பெண்ணை மணந்துகொண்டார்.

### பலதார இச்சை

பல ஸ்திரீகளை இச்சிக்கும் குணம் நம்மிடம் அந்தர்க்கதமாக உள்ளது. அறிவுள்ள எவரிடமும் பலதினிசு ருசிகளை விரும்பும் அவா ஊன்றி நிற்கிறது. ஒரே தினிசு என்ற தலைவேதனையை வெறுக்காதவர் கிடைப்பது அரிது. இந்த இயற்கையே பல தாரமணம் ஏற்பட்டதற்கு அடிப்படை என்று நம்பப்படுகிறது. ஒருதாரம் பற்றி நிற்கவேண்டும் என்பதெல்லாம் கொள்கையளவிலேயே. பெரிய கவிகளும் பாடகரும் மணம் செய்துகொள்வதில்லை. அவர்கள் தம் பயிற்சியுடன் பழகி அதோடு திருப்தியடைகிறார்கள். லட்சியத்துடன் மனம் ஒன்றி நின்றால் அதுவும் புத்தி சம்பந்தமான பலதார மணமாகும். ஓ! எங்கேயோ! வந்துவிட்டேனே!!

பல ஸ்திரீ இச்சையைப்பற்றிப் பேசினேன். அது ஒரு விசித்திர இயல்புள்ளது, அக்குணம் நம்மிடமிருக்கலாம். ஆனால் நம்மால் இச்சிக்கப்படுகிறவர் வேறொருவரிடம் இச்சைகொள்ளச் சம்மதிக்க மாட்டோம். அறுநூற்றி சொச்சம் மனைவிகளையும் வைப்பாட்டிகளையுமுடைய ஸாலமன் இவர்கள் வேறு புருஷரைக் காணலாம் என்று நினைத்ததாகச் சொல்லப்படவில்லை. அதற்கிடமும் இல்லாமல் அவன் காவல் செய்துகொண்டான். அதைப்போலவே காதரைன் என்ற ராணி காதல் செலுத்திய கனவான்கள் அந்த ராணியைத்தவிர வேறு பெண்ணிடம் மனம் செலுத்தக்கூடாதென்று விரும்பினாள். அந்த ராணி மாத்திரம் பலரிடம் கருத்துச் செலுத்தலாம்.

இந்த உணர்ச்சி உலகெங்கும் பொதுவே ஆயினும், கீழ்த் தேசங்களில் அது அனுபவத்தில் நடமாடுகிறது. முற்கால ஐரோப்பிய ஜாதியாரிடம் இருந்த இவ்வழக்கம் இப்போது ஈஜிப்டிலும் ஆப்பிரிகாவிலும் இந்திய சமஸ்தானங்களிலும் வழங்குகிறது.

எந்த மன்னரிடம் சென்றாலும் அந்தப்புரத்தில் எவ்வளவு வகைப் பெண்களுண்டு என்று சொல்வது முடியாத காரியம். சமஸ்தான வரும்படி, மன்னரது மனோ நிலையில் ஏற்படும் விகார உணர்ச்சிகள், பெண் [illegible]தாகர்களின் சாமர்த்தியம் என்னும் இவற்றைப் பொறுத்திருக்கின்றன.

நாகரிக முதிர்ச்சி பெற்ற ஒரு மன்னர் மூன்று பெண்களையே அந்தப்புரத்தில் வைத்திருக்கிறார். தம் சகோதரர் மனைவியாகிய விதவை ஒருத்தி அதில். குன்றுகளின் மேலுள்ள சிறிய சமஸ்தானங்களில் முப்பது நாற்பது ஸ்திரீகளிருப்பார். முக்கியமான சமஸ்தானங்களில் நூற்றுக்கணக்கில் தொகை ஏறிவிடும். அவ்விடங்களில் தாதிகளுக்கு வேலையதிகமுண்டு.

சில சமஸ்தானங்களில் மன்னருக்கே மனைவிகளைக் கூட்டிக்கொடுக்கும் உத்தியோகஸ்தரும் உண்டு. உத்தியோகங்களும் பிரமோஷன்களும் சம்பாதிக்க இவ்வேலை. இது நிற்க. எங்குமே சாதாரணமாக உத்தியோகஸ்தர்கள் அரண்மனைக்குப் பெண்கள் தேடிக்கொடுப்பதில் உதவி செய்பவர்களாயிருப்பது வழக்கம். 1929 ஜனவரி 15-ந்தேதி ப்ரின்ஸ்லி இந்தியா பத்திரிகையில் ஒரு சமஸ்தான அதிகாரியின் அனுபவங்கள் வெளியாகியிருக்கின்றன:—

"அவரது உத்தியோகஸ்த ரெல்லோரும் எப்போதும் சமஸ்தானாதிபதிக்குப் பெண்கள் தேடிக்கொடுப்பதில் காலந்தள்ள வேண்டியிருக்கிறது. நான் சிறிதுகாலம் அங்கு உத்தியோகம் வகித்தேன். மற்றவர்களைப்போல் செய்வதற்கு என்முறை வந்ததும் நான் அவ்வேலையைவிட்டு நீங்க வேண்டியதாயிற்று. இந்த வியாசத்தை நான் நல்லெண்ணத்துடன் எழுதுகிறேன். பொலிடிகல் ஏஜண்டின் கவனம் இதனால் இழுக்கப்பட்டால், அவர் அச்சமஸ்தானாதிபதியைப்பற்றி விசாரிக்கமுன் வரக்கூடும் என்ற எண்ணமே என்னைத் தூண்டியது. இதற்கிடையில் சமஸ்தானாதிபதியே தம் திவானுக்கு எழுதிய கடிதங்களை ப்ரின்ஸ்லி இந்தியா. பத்திரிகையின் ஆசிரியர் பிரசுரித்தால் நான் மேலே கூறியதை ருஜூசெய்யும்.

அரண்மனை,
1928 செப்டம்பர் 28.
நகல் கடிதம்

அன்புள்ள ஐயா,

லீவு மனுவுடன் தங்கள் கடிதம் கிடைத்தது. லீவுக்கு உத்திரவாகியது; ஆனால் கூடுமான வரையில் சீக்கிரம் திரும்பிவிடவேண்டும். தங்கள் கடிதத்தில் கண்ட விஷயங்களைப் பற்றியவரையில், இருவரையும் தயவு செய்து அழைத்துவரவும். அவர்கள் மிகவும் அதிலட்சணமுள்ளவர்களா யிருக்க வேண்டும். என் திருப்திக்கேற்றபடி நீங்கள் கொண்டுவந்தால் என்னிடம் ராஜபக்தி செலுத்தும் ஊழியரென்று மதிப்பேன்.

தங்கள் நம்பிக்கையுள்ள,
(ஒ.) ராஜா சாகிப்.

அதே தேதி பத்திரிகையில் 1-4-1929ல் ஒரு மகாராஜா தாராளமாகப் பின் வருமாறு ஒப்புக்கொள்கிறார்:—

மன்னர்களைப்பற்றி ஜனங்களிடம் வாய் மொழியாகப் பரவும் கதைகள் பல." "அவன் மந்திரியானான், ஏன்? அவன் சக்தி காரணமல்ல; மன்னருக்கு ஓர் அழகிய பெண்ணைக்கொண்டு வந்தான்." (ஹிஸ் ஹைனஸ்)





### ஜப்பான் சென்று வந்தவர்களுக்கு வரவேற்பு

இந்தோசைனா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்து தலைவர் திரு. பழ கும. குமரப்ப செட்டியார் அவர்கள், உபதலைவர் திரு அ. உ. இராமசாமி செட்டியார் அவர்கள், திருவாளர்கள் க. மு. ராம. முரு. முருகப்ப செட்டியார் அவர்கள், அ. ராம. வெ. சோமசுந்திரம்செட்டியார் அவர்கள் சி. சொ. ராம. முரு முருகப்ப செட்டியார்அவர்கள், சி. நாகையா அவர்கள் ஆகியோர்கள்,ஜப்பான் பிரயாணத்தை முடித்துக்கொண்டு மார்ஷல் ஜோபர் கப்பலில் 31-7-36-ந் தேதி காலை 6 மணிக்கு செய்கோன் விஜயம் செய்தனர். அவர்களை வரவேற்க, மேற்படி சங்கத்தார்கள் துறைமுகம் சென்று, அன்புடன் சங்க நிலையத்துக்கு அழைத்துவந்தனர். அன்னாரவர்களுக்கு சங்கக் காரியதரிசி திரு பெரி. அழ. மு. மு. நடேசன் செட்டியார் அவர்கள் நல்வரவு கூறி, ஜப்பான் நாட்டின் முன்னேற்றத்தை அறிந்து வந்ததின் பயனை நமது தொழிலுக்கு நற்பயனளிக்க வேண்டுமென்று கூறி, திரு. தெ. நா. மு. சோமசுந்திரம் செட்டியார் அவர்களால் அறுவருக்கும் மலர்மாலை அணிவிக்கப்பெற்றது. பின்பு திரு பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்களால் சங்கத்தார் அன்புடன் வரவேற்றமைக்கு, அறுவர்கள் சார்பாகவந்தனங்கூறப்பட்ட பின் திருவாளர்கள் அ. உ. இராமசாமி செட்டியார் அவர்களும் அ. ராம வெ. சோமசுந்திரம் செட்டியார் அவர்களும் தங்கள் பிரயாணத்தைப்பற்றியும், ஜப்பான் நாட்டின் அதிசயங்களைப்பற்றியும் விரிவாகப் பேசினார்கள்.

பிறகு காரியதரிசி அவர்களால் வந்தனங் கூறப்பெற்று கூட்டம் இனிது நிறைவெய்தியது.

### நிர்வாக சபைக்கூட்டம்

தாது வருடம் ஆடி மாதம் 25-ம்தேதிக்கு 9-8-36 காலை 9 மணிக்கு இந்தோ சைனா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கத்து ஆறுவது ஆண்டு ஆறுவது நிர்வாகசபைக் கூட்டம் சங்க நிலையத்தில் தலைவர் திரு பழ. கும. குமரப்ப செட்டியார் அவர்கள் தலைமையில் கூடிய [illegible]. 14 அங்கத்தினர் விஜயஞ்செய்திருந்தனர்.

### வட்டி விபரம்

நடப்பு வட்டி
தாது-ஆடி-மீ 0—4—0
தவணை வட்டி
தாது-ஆடி-மீ 0—4—0
8-8-36ல் நெல் விலை பீக்கல் 1க்கு 2$14 விருந்து 3$16வரை
" அரிசி விலை பீக்கல் 1க்கு 3$14 விருந்து 2$18வரை
" குருணைவிலை பீக்கல் 1-க்கு 2$66 விருந்து 2$68 வரை

### மந்திரிமீது நம்பிக்கையில்லை

இரங்கூன் காட்டிலாகா மந்திரி ஊயி. பீ. என்பவர் மீது ஒரு நம்பிக்கையில்லாத் தீர்மானம் மாஜி கல்விமந்திரியால் பர்மா சட்டசபையில் பிரேரேபிக்கப் பெற்றது. 4 மணி நேர விவாதத்துக்குப் பின் ஓட்டுக்கு விடப்பட்டது. சாதகமாக 34 பேரும் பாதகமாக 42 பேரும் ஓட்டளித்தனர்.



## சிங்கப்பூரில் ஆகாயப்படை யெடுப்பு ஏற்பட்டால்?

### அந்நகரம் எப்படி காப்பாற்றப்படும்?

### போலீஸ் டெப்போவில் ஒத்திகை

சிங்கப்பூர், ஆகஸ்டு 10உ

இன்று காலை சிங்கப்பூர் போலீஸ் டிப்போவில் உண்மையான விஷப்புகைத் தடைவேலை காட்டப்பட்ட பொழுது ஆகாயவிமானங்கள், போலி வெடிகுண்டுகள், விஷப்புகை முகமூடிகள், விஷக்கறை முறிவு, பிரதம சிகிச்சை, பாடை தூக்கிச் செல்லும் படை முதலியவைகள் முக்கியாம்சமாயிருந்தன.

சிங்கப்பூரிலேயே இம்மாதிரி முதன்முதலாக உயர்ந்த வெடிமருந்துகளையும் விஷப்புகை வெடிகுண்டுகளையும் போட்டு நகரின்மீது ஆகாயப் படையெடுப்பு நேரிடுங் காலத்தில் என்ன நடக்குமென்பதைக் காட்டுவதற்காக இச்சம்பவம் நடைபெற்றது.

'படையெடுப்பு' காலை 7-30 மணிக்கு ஆரம்பித்தது.

36-ம் நம்பர் படையைச் சேர்ந்த டார்ப்பிடோ வெடிகுண்டு விமானங்கள் தென் திக்கிலிருந்து சிங்கப்பூர் நோக்கிவந்து போலீஸ் டிப்போவைத் தாக்குவதற்காகத் தணிவாய்ப்பறந்தன.

டிப்போ பாடாங்கின் மத்தியில் வெடிகள் வெடித்ததற்கு இசைவாகத் தாக்கப்பட வெடிகுண்டுகள் போடப்பட்டதுபோல் காண்பிக்கப்பட்டது.

இந்நிரூபணம் மேஜர் ஏ. ஜே. பெவரிட்ஜின் தலைமையில் நடைபெற்றது. வந்திருந்த இதரர்களுள் ஜி. எஸ். ஓ. ஐ. ஆகிய கர்னல் ஏ. வி. பெர்ஸிவால், சிங்கப்பூர் தற்காப்புக் கமிட்டியின் சேர்மனாகிய லெப்டினெண்ட் கர்னல் ஆர். எல். ப்ரிங்க், போலீஸ் டிப்போ கமாண்டனாகிய மிஸ்டர் ஜே. டி. டாலி, சிங்கப்பூர் தலைமைப் போலீஸ் அதிகாரி எம். லிவைன், சிங்கப்பூர் முனிஸிபாலிடியின் டிப்டி பிரசிடெண்டாகிய ஜி. எல். ஹாம், முனிசிபல் இலாக்காக்களின் தலைவர்கள் மிலிட்டரி உத்தியோகஸ்தர்கள், சுமார் 150 காட்சியாளர்கள் முதலியோர் இருந்தனர்.

நிரூபணததில் கலந்துகொண்ட போலீஸார் எல்லோரும் இதற்கு முன் விஷப்புகைத்தடைப் போதனை எதுவும் பெறாத, ரெக்ரூட்களாகும்.

நிரூபணத்திற்காக, சிலும்பலேற்படுவதற்கு முன்னெச்சரிக்கையாக முன்கூடியே ஜன்னல் வரை மணற்பைகள் போட்டுவைக்கப்பட்டிருந்த மற்றபல குடிசைகளிலும் சகல உத்தியோகஸ்தர்களும் தஞ்சம் புகுந்திருப்பதாக நினைத்துக்கொள்ளப்பட்டது.

#### மதுச்சாலையினருகே 'குண்டுபட்டது'

இன்று காலை போலீஸ் போஜனசாலையின் மேன்மாடியே முக்கிய 'புகலிடம்' என உபயோகிக்கப்பட்டது—நிரூபணத்திற்கு வந்த மிலிட்டரி, போலீஸ் சிவில் அதிகாரிகளெல்லோரும் அதில் தங்கியிருந்தனர்.

சில நிமிஷ நேரங்கழித்து வேறு 2 ஆகாயப்படைகள் படையெடுப்பதற்குத் திரும்பி வந்தன. பலத்த வெடிச் சத்தங்களும், ஆகாயத்திலுள் மண் தெறித்ததும், போஜனசாலையினருகேயும், தற்காலிகமாய் ஒரு 'விஷப் புகை மத்திய ஸ்தலம்' ஆக மாற்றப்பட்டிருந்த ஒரு அடுத்த குடிசையின் பக்கத்திலும் குண்டுபட்டது குறிக்கப்பட்டதெனக் காண்பித்தன.

மூன்று படையெடுப்புகளில் ஒவ்வொன்றிலும் பத்து 'வெடிக்குண்டுகள்' போடப்பட்டதாக எடுத்துக் கொள்ளப்பட்டது.

இச்சமயத்தில் அபாயச்சத்தம் எழுப்பப்படவே, முகமூடிகள், எண்ணைத் தோல்களுட்பட விஷப்புகைத் தடைஉடுப்புகள் பூராவும் அணிந்திருக்க, துப்பாக்கிகளும் வான்களும் தாங்கிக்கொண்டு போலீஸ் பாராக்காரர்கள் அவர்களது ஸ்தானங்களில் நின்றனர்.

பின்னும் மணிகள் அடித்ததானது படையெடுப்பு தீர்ந்து விட்டதென்றும், நிருபணத்தின் முக்கிய பாகம் ஆரம்பித்துவிட்டதென்றும் காட்டியது.

டிப்போ உத்தியோகஸ்தர்கள் இக்நிலைமையில் பொறுப்பேற்றுக்கொண்டு, காயமடைந்தோர்களைக் கவனிப்பதற்கும், விஷப்புகை பட்ட இடங்களில் விஷக்கறையை மாற்றுவதற்கும், நெருப்பு இடிவு இன்னும் வெடிகுண்டு விஷப்புகைக்குண்டு முதலியவைகளாலேற்படும் பலன்களைக் கவனிப்பதற்கும் துரிதப்பட்டுக்கொண்டிருக்தார்களென எடுத்துக்கொள்ளப்பட்டது.

உடனே குண்டுபட்ட இடங்களைப் பார்வையிடுவதற்காக உளவர்களுட்பட சோதனைக் கோஷ்டியொன்று வெளியில் அனுப்பப் பட்டது.

அடிக்கடி அனுப்பப்பட்ட அறிக்கைகளினின்று, டெலிபோன் எக்ஸ்சேஞ்சு ஆயுதச் சாலை, வண்டிப்பேட்டை, பதனழிந்த தொட்டி, மதுச்சாலை முதலியவைகளும், எல்லாவற்றிலும் முக்கியமாக ரோட்டுச் சந்திப்புகளும் தாக்கப்பட்டதாகத் தெரிந்தது.

விஷக் கறைப்பகுதிகளை மாற்றுவதற்கும், நெருப்பு, இடிவு இன்னும் வெடிகுண்டு விஷப்புகைக்குண்டு முதலியவைகளால் ஏற்படும் பொதுவான பலன்களைக் கவனிப்பதற்கும் சிறு சிறு படைகள் அனுப்பப்பட்டன.

இதன் பிறகு படையெடுப்பைப் பற்றி விவாதங்களும் பேச்சுகளும் நடைபெற்ற பின்பு, உத்தியோகஸ்தர்கள் ஆலோசனைச் சபைகளாகப் பிரிந்து விஷக்கறை பட்ட இடங்களுக்கு விஜயம் செய்தனர். விசேஷமாய்ப் பயிற்சி பெற்ற உத்தியோகஸ்தர்களால் அவர்களுக்கு அங்குள்ள பிரச்னைகளை நிவர்த்திக்கும் வழிகள் கொடுக்கப்பட்டன.

இன்று காலை நடந்த நிரூபணத்தில் மிகுந்த ருசிகரமான அம்சங்கள் பல இருந்தன.

"ரெக்ரூட்" கள் அனுபோகம் இல்லாதிருந்தபோதிலும் குறிப்பிடத் தகுந்த திறமையைக் காண்பித்தனர்.

சோதனைக் கோஷ்டியார்கள் அவர்களது வான்களின்மீது வட்டமான காகித அட்டைகளைக்கொண்டு சென்றனர். யுத்தகாலத்தின்போது இந்த அட்டைகளில் மஞ்சள் வர்ணம் பூசப்படும். கடுகு விஷப்புகை போடப்பட்டிருக்கிறதா எனக் கண்டுபிடிக்க அவைகள் உபயோகிக்கப்படும். அப்புகை இருந்தால் அது அட்டையை சிவப்பு நிறத்திற்கு மாற்றிவிடும்.

#### விஷக்கறை முறிவு வேலை

பிற்பாடு விஷக்குண்டுக் கறைபட்ட இடங்கள், தரையில் சுண்ணாம்பு மருந்தைத் தெளிப்பதின் மூலமும் வேறு வழிகளிலும் சுத்தஞ் செய்யப்பட்டன.

விஷப்புகை பட்ட இடங்களின் நெடுகலும் அறிக்கைப் பிரசுரங்கள் வைக்கப்பட்டிருந்தன. உண்மையான யுத்த காலங்களில் இவ்வறிக்கைப் பிரசுரங்களில், குண்டு போடப்பட்ட தேதியும் மணியும், பிற்பாடு விஷக்கறை மாற்றப்பட்டதும் எழுதப்பட்டிருக்கும்.

படை தூக்கும் படைகள் காயமடைந்தவர்களைக் கொண்டுவந்தன. பழுதடைந்த ரோட்டை அடைத்துக்கொண்டிருக்கும் லாரியை அப்புறப்படுத்துமாறு இதர படைகளுக்கு தகவல்கள் கொடுக்கப்பட்டன.

(தமிழ்நேசன்.)

### பர்மா சர்க்கார் காரியாலயம்

பர்மா சர்க்கார் காரியாலயத்தினர் செப்டம்பர் முதல்வாரத்தில் மேமியோவுக்குப் பிரயாணமாவர். அங்கு செப்டம்பர் 5உ அவை திறக்கப்படும்.

## காங்கிரஸ் நடவடிக் கைகள்

### ஹிந்திப் பிரேரணை தோற்றது

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி 23வந் தேதி ஜவகர்லால் தலைமையில் கூடியது.

அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி, காரியக்கமிட்டி, காங்கிரஸ் மகாசபைப் பொதுக் கூட்டம், இவற்றின் எல்லா நடவடிக்கைகளும் கடிதப் போக்குவரத்துகளும் ஹிந்துஸ்தானி பாஷையிலேயே நடக்க வேண்டுமென்று திரு. எம். தேசாய் ஒரு தீர்மானங் கொண்டுவந்தார்.

தாய் பாஷைகளிலோ அன்றி ஆங்கிலத்திலோ பேச அ. இ. கா. கமிட்டி மெம்பர்களுக்குகாங்கிரஸின் 17வதுவிதி இடமளிக்கிறதென்றும் அந்த உரிமையை இத்தீர்மானம் பறிப்பதாக இருக்கிறதென்றும் திரு பட்டேல் கூறினார். திரு. சத்தியமூர்த்தியும் இதை எதிர்த்தார். கடைசியில் ஹிந்திப் பிரேரணை தோற்றது.

பிறகு 2 காரியக்கமிட்டி மெம்பர் தலைவர்களைத் தெரிந்தெடுக்கும்படி காங்கிரஸ்கமிட்டியைக்கேட்டுக்கொண்டார். சத்தியமூர்த்தி இதை எதிர்த்தார். 13 மெம்பர்களைத் தலைவர் தேர்ந்தெடுத்துவிட்டு இரண்டு மெம்பர்களை மட்டும் காங்கிரஸ் கமிட்டியைத் தேர்ந்தெடுக்குமாறு கேட்டுக் கொண்டிருப்பது சரியில்லை யென்றும் தலைவருக்கே அந்த அதிகாரம் 12 (ஏ) விதிப்படி கொடுக்கப்பட்டிருக்கிறதென்றும் கூறினார்; சத்தியமூர்த்தியின் எதிர்ப்பு பெரும்பாலோரால் ஆமோதிக்கப்பட்டு நிறைவேறியது.

—

### அய்மென் ஷண்முகானந்த சங்கம்

இச்சங்கத்தின் எட்டாவதாண்டு ஒன்பதாந்திங்கள் கூட்டம் சென்ற ஆடித் திங்கள் 31-ம் நாள் மாலை 4 மணிக்குமேல் உயர்திரு. ராம. ராமனுதம் அவர்கள் தலைமையின் கீழ் நடைபெற்றது. அவ்வமயம் தலைவரவர்கள் முன்னுரை கூறியதும் தோழர்களான சுப்புராமன் அவர்கள் "நமது கடமை" என்பது பற்றியும் சுப. ஆறுமுகம் அவர்கள் "திரேகப்பயிற்சி" என்பது பற்றியும் ராச. மயில்ச்சாமி "மாணுக்கர் கடமை" என்பது பற்றியும் ராம. அருணுசலம் அவர்கள் "கல்வி என்பது" பற்றியும் சி. மாணிக்கவாசகன் "பொருளும் அருளும்" என்பது பற்றியம், சுப. காளிமுத்தன் "கதர்" என்பதுபற்றியும், இளைஞன் பெரி. நாராயணன் "பெரியாரை வழிபடல்" என்பது பற்றியும், ராம. மீனுக்ஷிசுந்தரம் "சுகாதாரம்" என்பதுபற்றியும் நீண்டநேரம் பேசினார்கள். பின்னர் அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி மெம்பரும் தீவிர அபேதவாதியுமான ஸ்ரீயுத அச்சுத பட்டவர்த்தனரவர்கள் சென்னைக்கு விஜயஞ் செய்தபொழுது அவருடைய பிரசங்கத்துக்குக் காங்கிரஸ் மாளிகையில் இடம் அளிக்காததைக் கண்டித்து ஓர் தீர்மானம் நிறைவேறிற்று. பின் தலைவரவர்கள் தக்கமுடிவுரை கூறியதும் இரவு 8 மணிக்கு கூட்டம் இனிது நிறைவெய்தியதென காரியதரிசி ராம. அருணுசலம் அறிவிக்கிறார்.

## கர்ப்பமேற்படாது செய்ததாக

### ஒரு மங்கையின் குற்றச்சாட்டு

ஸான்பிரான்ஸிஸ்கோ, ஆக 21—

மிஸ் ஆன் ஹிவிட் என்ற மங்கை தனது தாயார்மீதும் இரு டாக்டர்கள் மீதும் 100,000 பவுனுக்கு ஒரு நஷ்டஈடு வழக்குத் தொடுத்திருந்தாள். அம்மூவருமாகச் சேர்ந்து தனக்கு கர்ப்பமேற்பட முடியாதபடி செய்து விட்டனரென்பது அப்பெண்ணின் புகார்

ஆன்ஹிவிட்டின் தந்தை எழுதி வைத்துள்ள உயிலில், ஆன் விவாகம் செய்துகொண்டு அவளுக்கு ஒரு குழந்தை பிறந்தாலன்றி 20,00,000 பவுன் பெறுமானமுள்ள டிரஸ்ட் நிதியை அவளுடைய தாயார் அனுபவிப்பதெனக் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இந்த நிதியைத் தான் அடையும் நோக்கத்துடன் அவளது தாயார் இரு டாக்டர்களைக் கொண்டு தனக்கு கர்ப்பமேற்பட முடியாதபடி செய்து விட்டதாக வாதியின் மனுவில் தெரிவிக்கப்பட்டிருந்தது.

ஆனின் மனோநிலை சரியாக இல்லையாதலால்தான் அவளுக்குக் கர்ப்பமேற்படாதபடி செய்தது நியாயந்தான் என்று அவ்விரு டாக்டர்களும் வாதித்தனர்.

ஆன் தான் மற்றப் பெண்களைப் போல் சாதாரண வாழ்க்கை நடத்த அனுமதிக்கப்பட வில்லை யென்றும், தன் வயதுள்ள சிநேகிதிகளுடனே, வாழ்க்கை ரகசியங்களைத் தனக்குத் தெரிவிக்கக்கூடிய மற்றவர்களுடனே தான் பழக இடங்கொடுக்கப்பட வில்லை யென்றும் கோர்ட்டில் தெரிவித்தாள்.

நீதிபதி இக்குற்றச் சாட்டு நிரூபிக்கப்பட வில்லையெனக் கூறி வழக்கை நிராகரித்து விட்டார்.

இதன் பேரில் வாதி அப்பீல் செய்து கொண்டிருக்கிறார்.

—

### விவேகானந்தர் சங்கம், காரைக்குடி

#### ஜவஹர் இளைஞர் சங்கம் இத்துடன் இணைக்கப்பட்டது

நிகழும் 25-8-36உ அன்று நடந்த நிர்வாகசபைக் கூட்டத்தில் இதே வீதியில் ஜவஹர் இளைஞர் சங்கம் என்ற பேருடன் இருந்த சங்கத்தை இத்துடன் இணைக்கத் தீர்மானிக்கப்பட்டு அதேபோல் சேர்த்துக் கொள்ளப்பட்டதுஎன காரியதரிசி வி. லெட்சுமணன் அறிவிக்கிறார்.

## பிஷப்புகள் கொலை

### ஸ்பெயினில் பிணக்குவியல்

ஹெண்டே ஆகஸ்டு 22

இன்று நாள்முழுதும் கலக கோஷ்டியைச் சேர்ந்த யுத்தக்கப்பல் ஸான் ஸயிஸ்டியன் மீது பீரங்கிப் பிரயோகம் செய்தது. அந்நகரின் மீது ஏராளமான வெடிகுண்டுகள் விழுந்து பெருஞ் சேதமேற்பட்டிருக்கிறது.

கலக கோஷ்டியைச் சேர்ந்த விமானங்கள் மலாகாவில் பத்துலட்சம் காலன் பெட்ரோல் உள்ள ஒரு கிடங்கின் மீது வெடிகுண்டுகளை வீசி அதை அடியோடு நாசம் செய்துவிட்டதாக செய்தி கிடைத்திருக்கிறது.

ஸெவில்லியிலிருந்து கிடைத்த ஒரு செய்தியிலிருந்து கலகக் கோஷ்டியின் விமானப்படை மாட்ரிட் மீது படையெடுத்து ராணுவப்படை தங்கியிருக்கும் பிரதேசத்தில் சரமாரியாக வெடிகுண்டுகளைப் பொழிந்ததாகத் தெரிகிறது.

கிஜாஹுக்கருகில் ராணுவப் படையினர் தங்குமிடமான ஸிமன்காவை சர்க்கார் துருப்புகள் கைப்பற்றுமுன் கடுமையான யுத்தம் நடைபெற்றது. கலகக்கோஷ்டியினரான 500 பேரில் 150 பேர்தான் தப்பியோட முடிந்ததெனத் தெரிகிறது.

மாட்ரிட்டில் நிலை வரவர மிக மோசமானதாகவருகிறது. எந்த நிமிஷத்திலும் விமானங்களிலிருந்து வெடிக்குண்டுகள் வீசப்படுவதுடன் பீரங்கிப் பிரயோகம் செய்யப்படக் கூடுமென ஜனங்கள் பீதியடைந்திருக்கிறார்கள்.

உணவுப்பொருள்களின் விலை பன்மடங்காகிவிட்டது. இனி உணவுப் பஞ்சம் ஏற்படுமோ என அஞ்சப்படுகிறது.

தினசரி பிரபுக் குடும்பங்களைச் சேர்ந்தவர்கள் சுட்டுக் கொல்லப்படுகின்றனர். பிரேத நிலையங்களில் பிரேதங்கள் வந்து குவிந்த வண்ணமாயிருக்கின்றன. ஸ்பானியப் பிரபுக்களைப் பாதுகாக்க அவர்கள் தாத்திற்கேற்ப 1000 பவுன் முதல் இனமளிக்கப்படுகிறது.

மலகத்தில் ஆறுபிஷப்புகள் பொதுவுடைமை வாதிகளால் கொலை செய்யப்பட்டனராம்.

—

### சிவகங்கை ராஜீய மகாநாடு

#### ஒத்திவைக்கப்பட்டது.

சிவகங்கை, ஆக. 22

சிவகங்கை இரண்டாவது ராஜீய மகாநாடு செப்டம்பர் 6உ க்கு ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

## எல்லோருக்கும் மரண தண்டனை

### மாஸ்கோ வழக்கில் தீர்ப்பு

மாஸ்கோ ஆக. 24—

ரஷிய சோவியத் சர்க்காரின் பிரதம நிர்வாகியும், பொதுவுடைமைக் கட்சியின் பிரதம காரியதரிசியும் சர்வாதிகாரியுமான ஸ்ரீ ஸ்டாலினையும் வேறு பல பிரமுகர்களையும் கொன்று தொழிலாளரின் சர்க்காரை கவிழ்க்கச்சதி செய்ததாக குற்றஞ் சாட்டப்பட்ட 16 பேருக்கும் இன்று கோர்ட்டில் மரண தண்டனை விதிக்கப்பட்டது.

#### குற்றத்தை ஒப்புக்கொண்டனர்

எல்லா எதிரிகளும் தம்மீது சாட்டப்பட்ட சதியாலோசனைக் குற்றத்தை ஒப்புக் கொண்டனர். தமது செய்கைக்கு பச்சாதாபப்படுவதாக வருத்தம் தெரிவித்தனர்.

விசாரணை முடிந்த பிறகு நீதிபதிகள் 8 மணி நேரம் ஆலோசனை செய்தனர். முடிவில் எல்லா எதிரிகளும் சுட்டுக் கொல்லப்படவேண்டுமென்று தீர்ப்பளிக்கப்பட்டது.

தீர்ப்புக் கூறப்பட்டவுடன் கோர்ட்டிலிருந்த எல்லோரும் ஆதரித்து ஆரவாரம் செய்தனர்.

இந்தத் தீர்ப்பு ரத்தாவதற்கு இனிமேல் அப்பீல் செய்யக்கூடிய இடம், சர்க்காரின் மத்திய நிர்வாகக் கமிட்டிதான்.

மாஸ்கோ, ஆக. 22

இப்போது நடக்கும் பகிரங்கக் கோர்ட் விசாரணையில், ஒவ்வொரு நாளும் புதிதாக திடுக்கிடத்தக்க பல சம்பவங்கள் நடக்கின்றன.

"தொழிலாளரின் சுகவாழ்வையும் ஆதிக்கத்தையும் தொலைக்குமாறு பெரிய சதி செய்த பாதகர்களைச் சுட்டு வீழ்த்தவேண்டும்" என்று இஸ்வெஸ்டியா பத்திரிகை எழுதியிருந்தது.

இன்று கோர்ட்டில் எதிரிகள் எல்லோரும் "எங்களுக்கு மரண தண்டனை விதித்து சுட்டுக் கொல்லுங்கள்; தொழிலாளருக்கு ஆசிகூறி விடைபெற்றுக்கொள்வது மட்டும் தான் எங்கள் ஆசை" என்று கோர்ட்டைக் கேட்டுக்கொண்டார்.

—













## சிரம்பான் விவேகானந்த நிலையம்

### திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் சொற்பொழிவு

11-8-36 மாலை 5-30 மணிக்கு சிரம்பான், கமரான் வீதி 11-ம் நம்பர் இல்லத்தில் உள்ள விவேகானந்த நிலையத்தில், வழக்கறிஞர் திரு. சி. எம். பெருமாள்பிள்ளை அவர்கள் தலைமையில், காந்திகர் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் பாரதியாரும், சீர்திருத்தமும் என்ற பொருள் பற்றி அரிய சொற்பெருக்காற்றினார்கள். தனவைசிய சீமாட்டிகளும், கனவான்களும் பலர் விஜயம் செய்திருந்தனர். தலைவருக்கும், சொற்பொழிவாளருக்கும் திரு. கரு. சா. சாத்தப்ப செட்டியாரவர்கள் மலர் மாலை யணிவித்தார்கள்.

திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் ஆற்றிய சொற்பொழிவின் சாரம் பின்வருமாறு:—

பாரதியார் பிராமண குலத்தில் பிறந்தவர். ஆனால், தற்காலம் உள்ள பிராமணர்களிடம் காணப்படும் குறைகளில்லாதவர். சர்வசாதாரணமாக நினைத்த மாத்திரத்தில் கவி இயற்றும் வல்லமையுள்ளவர். ஆழ்ந்த கருத்துக்களை எளிய நடையில் கற்றவரும் மற்றவரும் எளிதில் உணருமாறு இயற்ற வல்ல ஆற்றல் படைத்தவர். பாரதியார் கடவுள் பக்தியுள்ளவர். பல அரிய விஷயங்களை உயர்ந்த முறையில் வெளியிட்டிருக்கின்றார். அவைகளுள் தேசிய விஷயம், பெண்கள் விஷயம், விடுதலை விஷயம் மதவியன தலைசிறந்து விளங்குகின்றன. தாய் நாட்டினிடத்தும், இந்திய மக்களிடத்தும் அளவுகடந்த அன்பு கொண்டவர். செந்தமிழ் நாடு என்னும் பாடல்கள் அவரது தாய் நாட்டன்பை நன்கு விளக்குகின்றன. இந்திய மக்களின் முன்னேற்றத்தில் மிகுந்த நாட்டமுடைய பாரதி பண்டைச் சிறப்பை எடுத்துச்சொல்லி, தற்காலம் இந்தியர் நலிவுற்றிருப்பதையும் சுட்டிக்காட்டி மேன்மையுறுவதற்குரிய மார்க்கத்தையும் தம் வீரம் செறிந்த மொழிகளால் ஒப்பற்ற முறையில் சொல்லியுள்ளார். பெண்மை எவ்வளவு உயர்ந்தது என்பதுப்பற்றியும், இந்தியர் பெண்மைக்குச் செய்திருக்கும் அவமதிப்பையும், பெண்மை உயர்த்தப்படவேண்டிய விதத்தையும், நன்கு வலியுறுத்துகின்றார் பாரதியார். பெண்மையைப் பற்றி விளக்கமாக பாரதியைப்போல் ஒரு பெரியாரும் தெரிவிக்கவில்லை.

சொற்பொழிவாளர் இடை இடையே பாரதியாரின் பாக்களை இனிமையாகப்பாடி சபையோர்களை மகிழ்வித்தது மிகவும் பாராட்டுதற்குரியது.

பின்னர் தலைவரவர்கள் சொற்பொழிவாளரைப் பாராட்டித் தகுந்த முடிவுரை பகர்ந்தனர். திரு. பழ. அ. பழ. பழநியப்ப செட்டியாரவர்கள் வந்தனோபசாரம் கூற கூட்டம் இனிது நிறைவெய்தியது.

(ஒரு நிருபர்)

—

### புருஷனாக மாறிய ஸ்திரீ

#### பழைய சிநேகிதியுடன் விவாகம்

மூன்று மாதங்களுக்கு முன்வரை ஸ்திரீயாக இருந்த ஒருவர், சத்ர சிகிச்சை செய்துகொண்டதன் பேரில் இப்பொழுது ஒரு புருஷனாகி விட்டார். அவரது பெயர் மார்க்வெஸ்டன். வயது 30. பிளிமவுத்துக் கருகிலுள்ள ஒரு கிராமத்தைச் சேர்ந்த இவர் சர்வதேச ஸ்திரீகளின் விளையாட்டுகளில் பட்டம் பெற்றவர். அப்பொழுது அவர் மிஸ் மேரி எடித் எனப் பெயர்வைத்துக் கொண்டிருந்தார். அவர் தனது பழைய சிநேகிதி ஒருத்தியை விவாகம் செய்து கொண்டிருக்கிறார். 'லக்ஷத்தில் ஒரு பெண் என்றால் எனது மனைவி தான். 1928-ம் வருஷத்திலிருந்து எனது உடலில் மாறுதல் ஏற்பட்டு இறுதியாகப் புருஷனானேன். இவ்வளவு காலமும் அவள் எனக்கு வெகு உண்மையான சிநேகிதியாக இருந்திருக்கிறாள்" என அவர் தெரிவித்தார்.

## கணவன் தலைக்கு ரூ. 600

### மனைவி ஏற்படுத்திய பரிசு

25 வயதுடைய சீக்கிய மாது ஒருத்தி தனது கணவன் தலையை வாங்கிவிடுவோருக்கு ரூ. 600 கொடுப்பதாகக் கூறினாளென்று லாகூர் ஹைகோர்ட்டில் விசாரிக்கப்பட்ட ஒரு வழக்கினின்று வெளியாகிறது.

பிரஸ்தாப சீக்கிய மாது தனது கணவனை விரும்பவில்லையென்றும், அவனைக் கொன்றுவிட்டால் ரூ. 600 கொடுப்பதாக அவள் தன் ஆசை நாயகனிடம் தெரிவித்தாளென்றும், பலசிங் என்ற அவன் மற்றும் இருவரைச் சேர்த்துக் கொண்டு தன் ஆசை நாயகியின் கணவனைக் கொன்று விட்டானென்றும் அப்ரூவர் சாட்சியங் கொடுத்தான்.

போலீஸார் விசாரித்து சீக்கிய மாதின் சாட்சியத்தின்மேல் மூவரைக் கைது செய்தனர். அவர்களில் ஒருவர் அப்ரூவராகத் திரும்பினார். இவ்வழக்கை விசாரித்த செஷன்ஸ் ஜட்ஜ் பலசிங்குக்கும் இதர எதிரிகளுக்கும் மரண தண்டனையும், சீக்கியமாதுக்கு ஆயுள் பரியந்தம்தீவாந்திரசிக்ஷையும்விதித்தார்.

